# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – தை

2021 – ஜனவரி

தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 9ஆவது ஆண்டு குருபூஜை விழாவைத் தொடர்ந்து
25.09.2020 அன்று நடைபெற்ற நிறுவனர் நாள் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – தை

2021 – ஜனவரி இதழ் – 103

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| 1. | ஆசியுரை | 2 |
| 2. | சசிவன்ன போதம் | 4 |
| 3. | பரந்தாமன் பாமாலை | 10 |
| 4. | ஓம் நமோ நாராயணாய | 17 |
| 5. | பரமஹம்சர் உருவகக் கதைகள் | 22 |
| 6. | சீனத்தில் சிவன் | 24 |
| 7. | ஏன் வேண்டும் இறையுணர்வு | 27 |
| 8. | திருவருட்பிரகாச வள்ளலார் | 32 |
| 9. | கம்பராமாயணம் | 39 |
| 10. | திருவிளையாடற்புராணம் | 42 |

தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

## தட்சிணா மூர்த்தி

கற்றுணர் முனிவர் நால்வரும் காண்பான்
    காட்சிகாண் பொருளொரு மூன்றும்
மற்றுணர் குறியும் அமைந்த பாவனையும்
    மறைதரு குணங்களும் அகன்று
முற்றுணர் புரண பரசுக சொரூப
    முதல்வராய் மருவவோர் கல்லால்
நற்றுணர் மலர்க்கைக் குறியொடு மருவும்
    ஞான தேசிகன் அடி பணிவாம்

*- கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

அனைவருக்கும் புத்தாண்டு வாழ்த்துக்கள்; பொங்கல் வாழ்த்துக்கள். கடுமையாக அனைவரையும் அறைக்குள் முடங்கச் செய்து சர்வாதிகார ஆட்சி புரிந்த கொரோனா நுண்கிருமியின் 2020ம் ஆண்டு நம்மைவிட்டு விலகிச் சென்றுவிட்டது. இருள் விலகிப் பகலவன் வந்துவிட்டான். எனவே நம் அனைவருடைய உடல் வேதனை, மன வேதனை அனைத்தும் அகன்று முழுமையான, பரிபூரணமான அமைதி நிலவட்டும். நம் மனமும் உடலும் உயிர்ப்புடன், உற்சாகத்துடன் பணிகளை ஆற்றத் தொடங்கட்டும். வெற்றி நமக்கு உரியதாகட்டும்.

வாழ்த்துக்கள் சொல்லிக் கொள்வதிலேயே ஒருவருக்கொருவர் உறவை, நட்பைப் பலப்படுத்திக் கொள்ள முடியும். நம்மை நேசிக்கின்ற உறவும் நட்பும் இருக்கின்றன என்ற எண்ணம் யாருக்கும் பெருத்த மகிழ்வையும் ஆழமான அன்பையும் ஏற்படுத்தக் கூடியன. பொதுவாகவே நலம் விசாரிப்பது என்பது மிக நல்ல பழக்கம். நம் நலனில் அக்கறை உள்ள நட்பும் உறவும் நம்மைச் சுற்றி உள்ளனர் என்ற எண்ணம் தன்னம்பிக்கையை அதிகரிக்கும். உற்சாகத்தைப் பெருக வைக்கும். தன்னம்பிக்கையும் உற்சாகமும் இல்லாத மனதை உடைய யாரும் பெரிய காரியங்களை, சாதனைகளைச் சாதித்து விட முடியாது.

நமக்குத் தெரிய எத்தனையோ பேர் தங்களுடைய உறவினர்களை நீங்கள் நலமாக இருக்கிறீர்களா? என்று கூடக் கேட்பதில்லை. அக்கறை காட்டியதில்லை என்று குறைப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். நம் ரிஷிகேஷ் மடத்தின் பொறுப்பாளர் திருமதி. விசாலாட்சி அவர்களுக்கு அவர்களுடைய தாய் வழிப்பாட்டனார் தெய்வத்திரு. நாராயணன் செட்டியார் அவர்கள் 10 நாட்களுக்கு ஒரு முறை அஞ்சல் அட்டையில் செல்லச் சாலாவிற்கு அனேக

ஆசிர்வாதங்கள் நீயும் உன் கணவன் குழந்தைகள் எல்லாரும் சவுகரியமாக இருக்கிறீர்களா? தங்கள் சவுகரியத்திற்குக் கடிதம் எழுத வேண்டியது. வேணும் ஜெயங்கொண்டான் துணை என்ற கடிதம் கண்டிப்பாக வரும். பிள்ளைகள் விளையாட்டாக ஏன் பாட்டையா ஒரே விஷயத்தைத் தான் எழுதிக் கொண்டிருக்கிறீர்கள், அதை அச்சடித்து அனுப்பினால் அடிக்கடி எழுதும் வேலை மிச்சம் அல்லவா? என்று கேட்பது உண்டு. பதிலுக்கு அவர்கள் இல்லை ஆத்தா கையால் எழுதினால் தான் எனக்கும் சந்தோஷம், அதைப் பெற்றுக் கொள்ளும் உங்கள் அம்மா, சித்தி, ஆயா அத்தனை பேருக்கும் சந்தோஷம் என்பார்கள். இது தான் பெரியவர்கள் நமக்குச் சொல்லிக் கொடுத்த வாழ்வியல் நெறி.

இதைப் போலவே மாணவர்களுக்கும் இளைஞர்களுக்கும் வணக்கம், நன்றி, வாழத்துக்கள் சொல்லுவதும், தவறுகள் நேர்கின்ற பொழுது மன்னிப்புக் கேட்டுக் கொள்வதும் மாணவர்களுக்குப் பழக்கி விட வேண்டும். அப்பொழுது இந்த நல்ல வார்த்தைகள் உபசார வார்த்தைகளைச் சொல்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் மகிழ்ச்சி உற்சாகம் நம்பிக்கை அனைத்தும் பிறக்கின்றன.

எனவே நாம் எல்லோரிடத்தும் அன்பு செலுத்துவோம்; ஆதரவு அளிப்போம்; உற்சாகம் ஊட்டுவோம். நம்முடைய நல்ல வார்த்தைகள் எல்லாக் காலங்களிலும் சொல்லப்படட்டும்; அதன் பயனாக மகிழ்வும் உற்சாகமும் நம் எல்லோரின் மனத்திலும் தோன்றிப் பெருகட்டும்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*



## சசிவன்ன போதம் (தொடர்ச்சி)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

76. ஊக்கி யப்பர சீவர் தங்கள்
உடம்பு இரண்டும் இலக்கணா
வாக்கி யப்படி நீக்கி னால்ஒரு
வத்து வேபர வத்துவே.

ஈசுவரன், ஜீவன் என்ற இரண்டு சொற்களின் சக்தி விருத்தி அல்லது உபாதிகளுடன் கூடிய ஈசுவரன், ஜீவன் ஆகியவற்றின் உடல் சத்தி விருத்தி ஆகும்.(ஈசுவரன், ஜீவன் இருவருக்கும் உபாதிகள் உள்ள படியால் இருவரையும் ஏக ரூபமாகக் கொள்கிறோம்.) இந்த இரண்டும் ஒன்றே என்ற ஞானம் தோன்றினால் ஏகமான பிரம்ம வஸ்து மட்டுமே நிலைத்து இருக்கும் (ஈசுவரன், ஜீவன் என்பவை இரண்டல்ல ஒன்றே).

| | | |
|---|---|---|
| ஈசுவரன் | = | பிரம்மம் (அதிஷ்டானம்) |
| மாயை | = | ஆசரேயம் |
| மாயையில் பிரதி பிம்பம் | = | ஆபாசம் |
| ஜீவன் | = | அதிஷ்டானம், கூடஸ்தன் |
| ஆசரேயம் | = | அவித்தை |
| ஆபாசம் | = | அவித்தையில் பிரதி பிம்பம் |

லட்சணை மூவகைப்படும். விட்ட லட்சணை, விடாத லட்சணை, விட்டு விடாத லட்சணை ஆகியவை ஆகும்.

விட்ட லட்சணை : சொல்கின்ற உதாரணத்திற்கும் சொல்ல விரும்புகிற உவமேயத்திற்கும் நேரடி சம்பந்தம் எதுவும் இன்றி யுக்தியினால் அறியக் கூடிய லட்சணச் சொல் விட்ட லட்சணை ஆகும். உதாரணம் கங்கையில் கொண்டாட்டம், காவிரியில் தீப்பிடித்தது. கங்கைக்கும் கொண்டாட்டத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லாத போது சொல்லப்பட்டது விட்ட லட்சணை ஆகும். கொண்டாட்டம் நடை பெறுவது கங்கைக் கரையில் உள்ள ஒரு கிராமத்தில், எனவே கங்கைக்கும் கொண்டாட்டத்திற்கும் தொடர்பு இல்லை. சொல்லக் கருதியது கங்கைக் கரையிலே உள்ள காசியில் கொண்டாட்டம், எனவே உவமேயத்தை

விளக்குவதற்காகச் சொல்லப்பட்டிருந்தாலும் உடனடியாகத் தொடர்பு படுத்த முடியாததால் விட்ட லட்சணை என்று கூறப்படுகிறது.

விடாத லட்சணை : செவலை ஓடுகிறது பிடிங்கப்பா என்ற வாக்கியத்திலே செவலை நிறமுடைய பசு மாடு ஓடுகிறது என்பது தெரிகிறது. எனவே செவலை என்ற பண்புச் சொல் பசுமாட்டைக் குறிப்பதால் நேரடித் தொடர்புடையதாகிறது. எனவே இது விடாத லட்சணை (உவமேயத்தை விட்டு விலகாத உவமை).

விட்டு விடாத லட்சணை : அந்த சண்முகம் முன்னர் பல வருடங்களுக்கு முன்னால் காசியில் பார்த்தவர் தான், இப்பொழுது இராமேஸ்வரத்தில் அவர்துறவியாகத் தரிசனம் செய்ய வந்திருக்கிறார். இதிலே சண்முகம் என்கிற நபர் ஒருவர் தான். ஆனால் கால தேச வர்த்த மானங்களால் ரூபம் மாறித் தென்படுகிறது. இதுவே விட்டு விடாத லட்சணை. இந்த விட்டு விடாத லட்சணத்தைக் கொண்டு தான் பிரம்மத்தினுடைய சத்தியத் தன்மையை நிரூபிக்கிறார்கள்.

**77. ஓரில் விட்டதும் விட்டி டாததும்**
**உபய மும்என உணர்வுஉளோர்**
**தேரில்இ லக்கண திரிவி தத்தில்**
**இசைப்பர் மற்றது இயம்புவாம்.**

ஸ்ருதி வாக்கியங்களை, க்ரந்தங்களை ஆராயும் பொழுது விட்டது, விடாதது, விட்டு விடாதது என மூன்று வகையான லட்சணங்கள் உள்ளன என்று பெரியோர்கள் கூறுவார்கள்.

**78. மஞ்சு கூப்பிடுது என்றல் போலவும்**
**வடப கீரதி உள்ளதே**
**விஞ்சு கோஷம் அது என்றல் போலவும்**
**விட்ட லக்கணை ஆவதே.**

வடக்கு கங்கையிடத்து பலத்த ஆரவாரம் கேட்கின்றது என்று பேசுவது விட்ட லட்சணை ஆகும். கங்கைக் கரையில் உள்ள ஒரு கிராமத்தில் திருவிழாக் கொண்டாட்டம் நடைபெறுகிறது. இங்குக் கூறிய உவமையால் கங்கைக்கு நேரடித் தொடர்பில்லை; எனவே விட்ட

லட்சணை ஆகும். அதே போல, கட்டில் கூப்பிடுகிறது என்றால் கட்டிலில் படுத்திருக்கிறவர் அழைக்கின்றார் என்று பொருள். இதுவும் நேரடித் தொடர்பு இல்லாததால் மதியூகத்தால் அறிய வேண்டிய லட்சணை ஆகும். எனவே விட்ட லட்சணை என்று அழைக்கப்படும்.

**79. சிவலை நின்றது வெள்ளை போயினது**
**என்று செப்புதல் போலவே**
**கவலை இன்றிவி டாத லக்கணை**
**என்று நீ கொள் கருத்திலே.**

செவலை மாட்டுத் தொழுவத்தில் கட்டி இருக்கிறது, வெள்ளை ஓடி விட்டது என்றால், செவலை மாடு தொழுவத்தில் கட்டி இருக்கிறது. வெள்ளை மாடு ஓடி விட்டது என்று பொருள். இந்த இரண்டு வண்ணங்களும் நேரடித் தொடர்பு கொண்டிருப்பதால் இது விடாத லட்சணை. ஏ மாம்பழம் என்று கூப்பிட்டால் பழம் விற்பவன் வருகிறான். இப்படிச் சொன்ன சொல்லோடு நேரடித் தொடர்புடைய மற்றொரு அர்த்தத்தைக் கொடுக்கிற உவமை விடாத லட்சணை ஆகும்.

**80. மேவும் விட்டுவி டாத லக்கணை**
**மெய்ம்மை யாதுஎனில் அந்தஇத்**
**தேவ தத்தன்எ னும்பொ ருள்படி**
**சிந்தை செய்திடு தீரவே.**

வேதாந்தக் கருத்துக்கள் குறிப்பாக, தத்துவமஸி என்ற மகாவாக்கியத்தில் விட்டு விடாத லட்சணையால் முமூட்சு புரிந்து கொள்ள முடியும்; எப்படி என்றால் காசியில் பார்த்த தேவ தத்தனே இராமேஸ்வரத்தில் பார்க்கும் துறவி இவர் என்று சொல்வதைப் போல் புரிந்து கொள்ளலாம். இதுவே விட்டு விடாத லட்சணை ஆகும்.

**81. விட்ட லக்கணை தனையும் விட்டுவி**
**டாத லக்கணை தனையும்நீ**
**விட்டு விட்டுவி டாத லக்கணை**
**யால்வி ளங்குவி ளங்கவே.**

விட்ட லட்சணை மற்றும் விடாத லட்சணை ஞான விசாரத்திற்கு அவற்றை விலக்கி விட்டு விடுதல். விட்டு விடாத லட்சணை மூலம் உன்

சொரூபத்தை நன்றாக அறிவாயாக. ஞான உருவான சாட்சியாய் இருக்கின்ற ஜீவனே முற்காலத்தில் அனான்ம வடிவாக இருந்தவன். இப்பொழுது பிரம்ம சொரூபமாக விளங்குகிறான். இதுவே விட்டு விடாத லட்சணை ஆகும்.

**82. போது மேவிய தேசம் விட்டொரு**
**புருட னைக்கொள்ளும் ஆறுபோல்**
**ஓதும் ஈருடல் கண்டு விட்டதன்**
**உண்மை காண உணர்ந்திடே.**

அதிஷ்டானமாய் உள்ள கூடஸ்த பிரம்ம சைதன்னியங்கள் இரண்டல்ல ஒன்றே என்று அந்த மகா வாக்கியத்தின் வாயிலாக உண்மையை உணர்ந்துகொள். தத்பதத்தில் சர்வகாரணன் முதலிய ஏழு உபாதிகளையும் நீக்கி எஞ்சிய பிரம்ம சைதன்னியமும், துவம்பதத்தில் தூலதேகம் முதலிய ஏழு உபாதிகளும் நீக்கி எஞ்சிய கூடஸ்தனும் ஒன்றே இரண்டல்ல என்று தெளிய வேண்டும். அவனே இத்தேவதத்தன் என்பதில் அவன் என்பது காசி க்ஷேத்திரத்தில் இராஜாவாக குறைந்த வயதுடன் ஒருவனைக் குறிக்கும். இவன் என்பது இராமேஸ்வரத்தில் சந்நியாசி வேடத்துடன் அதிக வயதுடன் பார்த்த அந்த இராஜாவைக் குறிக்கும். இதில் காசி க்ஷேத்திரம், இராஜ வேடம், குறைந்த வயது, இராமேஸ்வர க்ஷேத்திரம், சந்நியாச வேடம், அதிக வயது ஆகிய விரோத வாதங்களை விட்டுப் புருஷனை மாத்திரம் பார்த்தபோது அவனே இவன், காசியில் ராஜவேடத்தில் பார்த்த இவன் (இவனே அவன் என்று ஏகத்துவம் சித்திக்கின்றது.) அது போல, தத்துவமஸி என்னும் மகா வாக்கியத்தில் ஈசுவர ஜீவர்களின் விரோத தர்மங்களான காரண காரிய உபாதிகளை விட்டு அவிரோத பாகமாகிய கூடஸ்த பிரம்ம ஐக்கியத்தைக் கொள்வதாம். விரோதமாகிய அசேதனமாகிய உபாதிகளை விட்டு விரோதமின்றிய சுத்த சேதனம் கொள்ள வேண்டும். இஃதே பாகத்தியாக லட்சணை எனப்படும். வாச்சியார்த்தம் விட்டு இலட்சியார்த்தம் கொள்வது. ஸ்ருதியும் பிரம்மம் சச்சிதானந்த வடிவம் என்கிறது. ஜீவனுக்கும் மூன்று அவஸ்தைகளிலும் நான் இருக்கிறேன் என்ற உணர்வு உண்டு. ஆதலால் சத்து, ஜீவன் மூன்று அவஸ்தைகளையும் அறிவதால் சித்து. ஜீவனும் சுழுத்தியில்

ஆனந்த வடிவமாகவே இருக்கிறான். ஆதலால் ஆனந்தமானவன்; ஆதலால் ஜீவனும் உண்மையில் சச்சிதானந்த வடிவமாய் இருக்கிறான். ஆதலால் ஜீவன் பிரம்மம் இவை வேறு வேறல்ல ஒன்றே என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

**83. பிரியா உயிர்கா ரியமாம் உடலும்**
**பிரமத்து உறுகா ரணமாம் உடலும்**
**கரிஆ கியவா தனையும் கழியக்**
**காட்டும் படிகண் டுகொள்கண் உறவே.**

சீவனை விட்டு நீங்காதிருக்கின்ற காரிய உபாதியாகிய ஏழையும் ஈசுவரனை விடாமல் பொருந்திய காரண உபாதியாகிய ஏழையும் அவ்வுபாதிகள் இரண்டிற்கும் சாட்சியாகக் கூடஸ்த பிரம்மங்களை முறையே சீவ ஈசுவரர்களது உண்மை வடிவமாக உணர்ந்து அப்படி சாட்சியாக உணர்ந்த அந்த(துவித) வாதனையும் நீங்க நாம் உபதேசிக்கும் விதமே நீ பிரத்தியட்சமாகத் தெரிந்து கொள்வாய்.

**84. கரணத் திரள்நிற் பினும்அப் பொருளைக்**
**காணக் கிடையாது அவைகை அறவே**
**மரணப் படினும் அதுகண் டுகொளும்**
**வழிஇல் லைஎனும் படிநீ மதியே.**

அகக்கரணமும் புறக்கரணமும் முழுமையாகச் செயல்படக் கூடிய விழிப்பு நிலையிலும் அந்தப் பிரம்மத்தைக் காண இயலாது. அகக்கரணமும் புறக்கரணமுமாகிய யாவும் ஒரு செயலுமின்றி ஒடுங்கி நிற்கின்ற உறக்க நிலையிலும் அந்தப் பிரமத்தை அறிந்து கொள்ளும் மார்க்கம் இல்லை என்பதைத் தெரிந்து கொள்வாய். விழிப்பு நிலையில் மித்தையாகிய உலகப் பொருளை உணர்வதற்கும், உறக்கத்தில் ஒன்றும் உணராமைக்கும் இந்த இரண்டு அவஸ்தைகளும் கருவியாகலின், பிரமத்தை உணர்வதற்கு இந்த அவஸ்தைகள் பயன்பட மாட்டாது என்று உணர வேண்டும்.

**85. எந்தக் கரணங் களும்மே வல்நனா**
**இதில்வா தனையால் விடயங் களொடே**

**அந்தக் கரணங் கள்பொருந் தல்கனா**
**அவைமாய் தல்சுழுத் தியவத் தையே.**

தூல உடலுக்கே சாக்கிரம். சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்று நிலைகளும் உண்டு. அவித்தையில் பிரவிம்னாயுள்ள சிதாபாசன் சாக்கிரத்தில் இந்த 26 தத்துவங்களுடன் கலந்து நிற்கும் போது விசுவன் என்றும், சொப்பனத்தில் தூல சரீரத்தை விட்டுச் சூட்சும சரீரத்துடன் கூடி நின்ற போது தைஜசன் என்றும், சுழுத்தியில் காரிய சரீர தத்துவங்கள் 26யும் கைவிட்டு, காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தியிருக்கும் போது பிராஞ்ஞன் என்றும், பிரம சைதன்னியமும் சாக்கிரத்துக்குச் சாட்சியாய் இருக்கும் போது சீவாத்மா எனவும், சொப்பனத்துக்குச் சாட்சியாய் இருக்கும் போது அந்தராத்மா எனவும் சுழுத்திக்குச் சாட்சியாய் இருக்கும் போது பரமாத்மா எனவும் அவத்தாத்திரய (மூன்று அவத்தைகளிலும்) சாட்சியாய் இருக்கும் போது ஞானாத்மா எனவும் கூடஸ்தன் எனவும் சொல்லப்படும். சாட்சியாகிய கூடஸ்தன் இலட்சியார்த்தம் வாச்சியார்த்தம் அவை 3 சரீரங்கள், (3 அபிமானிகள்: விசுவன், தைஜசன், பிராஞ்ஞன்) 3 அவத்தைகள், 1 சாட்சியாகிய சைதன்னியம்.

**86. வினவில்ப ரத்தைஅறிவு உறுதற்கு**
**அவத்தைபுலன் வினைமாறியே**
**நனவில்சு முத்திநிலை வரின்அப்**
**பொருள்திகழும் நலம்ஆகவே.**

சுரோத்திரம் முதலிய பொறிகள் அனைத்தையும் பொருந்தியிருந்தாலும் விஷய அனுபவ ரூபமான பகிர்முக விருத்தி அவைகட்கு இல்லாமையால் நனவிற் சுழுத்தி எனப்பட்டது. அந்தக்கரணத்தையும், அதன் விருத்திகளையும் (எண்ணங்களையும்) ஒளிர்விக்கின்ற (துவம்பத இலட்சியார்த்த பிரத்யக்) சாட்சி வடிவ ஆன்மாவை அன்னமயம் முதலிய ஐந்து கோசங்களிலும் வேறுபடுத்திப் பிரித்து அறிய வேண்டும். இப்படி விசாரத்தினால் பிரம்ம அனுபவம் உண்டாகும்.

87. **திவிதத்து அவத்தைகளை அறிவுஉற்ற**
**அத்துரியநிலை சீவனே**
**இவிதத்தில் அப்புருடன் நனவுற்ற**
**அத்துரியநிலை ஈசனே.**

ஜீவன் துரிய நிலையிலும் புருவ மத்தியில் சகல கரணங்களும் கூடி விழிப்பு உணர்வோடு இருப்பதால் தூங்கும் போது சரீரம் விழுவது போல் விழுவதில்லை. சுழுத்தியில் விழுந்து விடும் ஈசுவரனின் துரிய நிலையில் விளங்கும் சர்வ சாட்சியாய் பிரம்மமும் ஜீவனின் துரிய நிலையில் விளங்கும் சாட்சியாகிய கூடஸ்தன்.

*(தொடரும்...)*

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 6

**தமிழாகரர் தெ.முருகசாமி**
**(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி**

திருவரங்கம் முதல் திருவெள்ளியங்குடி வரை 22 திவ்விய தேசங்களைச் சேவிக்கச் செய்த காப்பியக் கவிஞர் மீனவர் நம்மைக் கம்பர் பிறந்த தேரழுந்தூருக்குக் கூட்டிச் செல்ல நாம், உபய நாச்சியருடன் ஆமருவியப்பனாம் தேவாதி ராசனைச் செங்கமலவல்லித் தாயாருடனும் சேவிக்கின்றோம்.

எம்பெருமானாம் பரந்தாமன் கிழக்கு நோக்கிய கோலத்திருமுகப் பொலிவுடன் நின்ற திருக்கோலத்தில் பக்தர்களுக்குச் சேவை சாதிக்கின்றான். திருமங்கையாழ்வாரின் மங்களாசாசன மகிமையுடைய திருத்தலம் இது.

வைணவ வைபவத்தில் இத்திவ்விய தேசம் ஒன்றானாலும் தமிழ் உலகில் மறக்க முடியாத ஊர் என்பதைக் காப்பியக் கவிஞர் மீனவர் கம்பன் எனும் புலமைக் கவியரசன் பிறந்த ஊர் (4) என்றார். கம்பத் தமிழ் வித்து இங்கு நாற்றங்காலாகியே உலகெங்கிலும் நடப்பட்டுத் தமிழ் விளைச்சலைத் தந்தது என்றால் அது மிகையில்லை என்பதே தெய்வத்தமிழ் வரலாறு. இந்த உண்மையையும், கவிஞர் கும்பமுனி கருடன் முதல் கும்பிட்டுச் சிறந்த ஊர் தேரழுந்தூர் (4) என்றதால் உறுதிப் படுத்தியுள்ளார்.

தமிழ் நாவலர் சரிதையில் கம்பருக்கும் கும்பமுனிக்கும் தொடர்புடைய ஊர் தேரழுந்தூர் எனக் கூறப்பட்டுள்ளது.

*கம்பன் பிறந்தவூர் காவிரி தங்குமூர்*
*கும்பமுனி சாபம் குலைந்தவூர் - செம்பதுமத்*
*தாதகத்து நான்முகனும் தாதையும் தேடிக்காணா*
*வோதகத்தார் வாழுமழுந் தூர்.*

இத்தேரழுந்தூரில் ஓர் உன்னதத் தத்துவம் உடையதாக வைணவச்சிரோன் மணிகள் கூறுகின்றனர். அதாவது பரமனால் உலகம் படைக்கப்பட்டாலும் படைக்கப்பட்டவற்றுள் உயர்திணை உயிராகிய மனித ஆன்மாவானது நன்றிக்கடனைப் பரமனுக்குத் திரும்பிச் செலுத்தும் விதமாகத் தன்னையும் தன்னால் உண்டாக்கப் பட்டவற்றையும் அர்ப்பணித்து நிவேதிக்கும் போது இத்தேரழுந்தூர் தேவாதிராசன் ஆனந்தமாக ஏற்றுக் கொள்கின்றதால் இத்திவ்விய தேசப் பரந்தாமன் ஆ மருவிய அப்பன் எனப்பட்டானாம்.

ஆ என்றால் ஆன்மா, ஆன்மா தந்ததையெல்லாம் அன்போடு மருவி ஏற்றுக் கொண்டானாம் என்பது கருத்து, குசேலர் அரிய பெரிய பட்சணங்களைக் கொண்டு செல்லாமல் எளிய அவல் கொண்டு சென்றதை மருவி ஏற்ற சௌலப்பியம் போல் பக்த கோடிகள் அர்ப்பணிக்கும் எல்லா விதத்தையும் வைவேத்தியமாக ஏற்கும் அரிய பெரிய தத்துவத்தின் அதிர்வு (VIBRATION) துடிப்பான ஊர் தேரழுந்தூர் என்பது கருத்து.

இத்திவ்விய தேசம், திருவழுந்தூர் எனும் சிறப்புப் பெயர் பெற்றது, தி என்பது திருமகளைக் குறிப்பது. திருமகளாம் இலக்குமி நின்று நிலைக்கும் ஊர் என்றதால் சைவத்தில் திருநின்ற ஊர் என்பது போலத்திரு அழுந்த நின்று அருள்பாலிக்கும் ஊர் எனப்பட்டது. இருப்பினும்

*தேரோடு வான்மிசையில் திரிகின்ற திறனுடையான்*
*தேர்விழவே முனிவரெலாம் திரண்டங்கே சாபமிடத்*
*தேரழுந்திப் போனமையால் தேரழுந்தூர் என்றான*
*சீர்பதிவாழ் திருமாலின் சேவடிகள் போற்றுமினே (2)*

எனக் காப்பியக் கவிஞர் நம்மைப் பரந்தாமனைத் தொழவைத்த தோடு மயிலாடு துறைக்குப் பக்கமான திருச்சிறு புலியூருக்குக் கூட்டிப் போக அங்குள்ள சலசயனப் பெருமாளின் சந்நிதியில் நின்று சேவிக்கின்றோம்.

மூலவர் - தெற்கு நோக்கிய நின்ற திருக்கோல சலசயனப் பெருமாளாகவும் உற்சவர் - அருள்மாக் கடல் என்னும் கிருபா சமுத்திரப் பெருமாளாகவும் உள்ளனர். இத்திவ்ய தேசத்துப் பெருமாள் புலியின் கொடூரத் தோடும் வரும் பக்தனையும் மாற்றி சாந்தப் படுத்திக் காப்பாற்றும் கடல் போன்ற கிருபையைச் செய்பவன் என்பதால் சிறுபுலியூர் எனப்பட்டது.

வியாசருக்கும் வியாக்கிர பாதர்க்கும் அருள்பாலித்த ஊர். வியாக்கிரபாதர் என்பார் புலிக்கால் முனிவராவார். திருமங்கையாழ்வார் - கள்ள மனம் விள்ளும் வகை கருதிக்கழல் தொழுவீர் எனத் திருமா மகள் மருவும் சிறுபுலியூரைச் சரணடைய, பக்தர்களை அழைத்தது போலவே நம் காப்பியக் கவிஞரும்,

***நல்லதிரு மாமகளாம் நாச்சியார் உடனாய***
***வில்லியான் வியாசருடன் வியாக்கிர பாதருக்கும்***
***ஒல்லைவந் துதவியருள் எல்லையிலாச் சிறுபுலியூர்***
***வணங்குமினே*** - என்கிறார்.

திருமங்கை மன்னராம் பரகாலன் பாடுதமிழ் கேட்டருளும் சிறுபுலியூர் சேவடிகளைக் கரங்குவித்துச் சேவித்தவர்களை - அடுத்து சீர்காழிக்குப் பக்கத்தே ஆக்கூர் செல்லும் வழியில் உள்ள தலைச் சங்காடு எனப்படும் தலைச் சங்க நாண்மதியம் எனும் திவ்யதேசத்திற்குக் கூட்டிச் செல்லும் மீனவர், தலைச்சங்க நாச்சியார் உடனாய வெண் சுடரானின் திருமேனியைக் காட்டித் தரிசிக்கச் செய்கிறார்.

இத்திருத்தலத்தில் லோகநாதனாக, வியோம சோதிப்பிரானாக வீற்றிருக்கும் வெண்சுடர்ப் பிரான் தன்னிருப் பிடத்திலிருந்து தோன்றிய சந்திரனுக்குத் திருவருள் பாலித்துத் தரிசனம் தந்த தத்துவ மகிமையை மங்களா சாசனம் செய்யும் திருமங்கையார் பெரிய திருமடலில் நான் வணங்கும் நன்னீர்த் தலைச் சங்கம் என்றார்.

இப்படியாகத் திருமங்கை பாவிரித்த பாசுரத்தின் பரந்தாமனை வணங்கிய நாம் மீனவருடன் மயிலாடுதுறை நடுவண் நகராகிய திரு இந்தளூர் திவ்ய தேசத்திற்குச் சென்று பரிமள ரெங்கனைப் பணிந்து சேவிக்கின்றோம்.

இத்திரு இந்தளூர் திருமாலின் பஞ்சசயின தலங்களில் நடுவாக உள்ளதாகும். இங்குள்ள பரிமளரங்கநாதன் சுகந்தவனநாதன் பெயருடன் கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் வீர சயனத் திருக்கோலத்துடன் காட்சி தருகிறார். இங்குள்ள தாயாருக்குச் சந்திரசாப விமோசனவல்லி என்று பெயர்.

இத்திருத்தலத்தில் பரந்தாமன் தன்னிடமிருந்து தோன்றிய சந்திரன் பெற்ற சாபத்தைப் போக்கிய தத்துவ விசேடம் உடையதாகும். இது பற்றிய குறிப்பையே மீனவர் சந்திரனார் பெற்ற தொரு சாபத்தைத் தீர்த்தபதி இந்தளூர் (1) என்றார்.

திருமங்கை பாசுரமாம் தெய்வத் தமிழ் மாந்தி வீற்றிருக்கும் பரந்தாமன் எனப் போற்றும் திருமங்கை மன்னரின் மங்களா சாசனத்தில் கூறும்,

***முன்னை வண்ணம் பாலின் வண்ணம்***
***முழுதும் நிலைநின்ற***
***பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம்***
***வண்ணம் எண்ணுங்கால்***
***பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம்***
***இந்த ளூரரே!***

என்ற இப்பாடல் போல் சேரமான் பெருமாள் பாடிய பொன்வண்ணத்தந்தாதி, நடராசப் பெருமானை வருணிக்கிறது.

திருமாலுக்குக் கருநிறமே உடைமையானாலும் அவர் வெண்சங் கேந்தும் சிறப்பில் அச்சங்கின் நிறம் உடல் முழுவதிலும் பரவியதால் வெண்நிறம் அமைந்ததாய் உணரலாம்.

ஈண்டு இப்பாடலில் வண்ணம் என்றது நிறத்தைக் குறித்தாலும் கம்பர் இதனைப் பண்பாகக் கூறுகிறார். அகலிகையைக் கல் உருவத்திலிருந்து பெண்ணாய் எழுப்பிய போது கைவண்ணம் அங்குக்

கண்டேன் கால் வண்ணம் இங்குக் கண்டேன் என விசுவாமித்திரர் வழிக்கம்பர் இராமனை அனுபவித்தார். ஆக வாழ்வில் அனைவர்க்கும் சுகந்தம் நல்கிப் பாவம் போக்கும்இந்தஞரைச் சேவித்ததும் திருநாங்கூர் என்னும் திருக்காவனம் பாடியாம் திவ்ய தேசத்திற்கும் கவிஞரின் அழைப்பால் சென்று, தாயார் மடவரல் மங்கை எனத் தமிழ்ப் பெயர் கொண்டவருடன் பரந்தாமனாம் கோபால கிருட்டிணனைச் சேவிக்கின்றோம்.

திருமங்கை மன்னர் மாவளம் பெருகிமன்னும் மறையவர் வாழும் நாங்கைக் காவளம் பாடிமேய கண்ணனே! களைகண்நீயே! எனத்துதித்தது போல் துன்பத்திற்குத் துணையாவான் நீயே (களைகண்) என நாமும் வேண்டுகிறோம்.

செங்கமலத் தாயார் ஈங்கு மடவரல் மங்கை எனப் பாராட்டப் படுவது பெண்ணியலின் பண்பை விளக்கும் உன்னதமாகும், திருமுருகாற்றுப் படையில் வள்ளி நாச்சியாரை நக்கீரர் மடவரல் வள்ளி எனக் காதல் பண்பிற்குரிய இலக்கணமாகச் சிறப்பித்தார், இங்ஙனம் காதலைச் சிறப்பிக்கும் இல்லறத்திற்கேற்பத் திருநாங்கூரில் பரந்தாமன் ருக்மணியாம் சத்தியபாமாவுடன் கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் நின்ற திருக்கோலமாய் வீற்றிருக்கின்றார்.

ஆன்மாக்களாம் ஆநிரைகளைக் காத்து மேய்ப்பவன் என்பதால் கோபால கிருட்டிணன் எனப்படும் நாங்கூர் பெருமான், இந்தத் தலத்தில் பதினோரு நாரணனாய் வந்தமர்ந்தான் (2) என்கிறார் மீனவர். இப் பதினோர் நாரணர்களும் திருநாங்கூரைச் சுற்றியுள்ள திவ்ய தேசத்தினின்றும் தை அமாவாசையன்று காலையில் பல்லக்கில் தனித்தனியே எழுந்தருளி இரவில் ஒருசேர, பதினோர் சூரியரும் ஒருசேர உதித்தாற்போலக் கருட சேவை காட்சி நல்குவது கண்கொள்ளாக் காட்சியாகும். இத்திருக்காட்சியானது ஆழ்வார் திருநகரில் நம்மாழ்வாரைக் காணப் பன்னிரு திவ்ய தேசப் பெருமாளும் ஒருசேர எழுந்தருளும் திவ்ய தரிசன வைபவத்தை நினைப்பது போலாகும் எனலாம்.

திருநாங்கூர் திவ்ய தேசம் வணங்கிய நாம் சீர்காழி என்னும்

காழிச்சீராம விண்ணகரத்திற்குக் காப்பியக் கவிஞர் வழிகாட்டுதலுடன் சென்று மட்டவிழ்குழலியாம் லோக நாயகி உடனாய திரிவிக்கிரமனைச் சேவிக்கின்றோம். இங்குள்ள பரந்தாமன் கிழக்கு நோக்கிய கோலத்துடன் உலகளந்த சேவையைத் தந்து காட்சி தருகிறார். இவர் உலகிலுள்ள உயிர்க் கூட்டங்களை ஆட்கொள்வதுடன் சிறப்பாக ஞானிகளின் ஆயுளை அளந்து முத்திப் பேறருளவல்லவராக உள்ளவராவர்.

திருமங்கை மன்னரின் பிரதாபத்தில் நாம், ஒரு குறளனாய் இருநிலம் மூ வடிமண் வேண்டி உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும் தருகஎனா மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன் தாள் இணைகளைச் சேவிக்கின்றோம்! மாவலியிடம் மூன்றடி மண் கேட்ட போது ஓங்கி உலகளந்தான், உரோமச முனிவரின் வேண்டுகோளுக்கிணங்க திருவிக்கிரம அவதாரம் எடுத்ததாக மீனவர் முன்னாளில் உரோமச முனிவனார் விழைந்தபடி விக்கிரமத் தனிக் கோலம் காட்டியவன் (1) என்றார்.

இங்ஙனம் நீண்ட திருவடியால் மாவலிக்கு உலகளந்து அருள் பாலித்த உத்தம சிறப்பை அறிந்ததும் திரு அரிமேய விண்ணகரம் செல்கின்றோம், அங்கே அமுதகட வல்லியோடே வீற்றிருக்கும் குடமாடு கூத்தனை மீனவர் காட்ட நாம் சேவிக்கின்றோம்!

இது திருநாங்கூர் உள்ளேயே உள்ள திவ்ய தேசமாகும். முன்னர் கண்ட திருநாகூராம் திருக்காவனம்பாடியைச் சுற்றி 11 வகையான திருநாகூர்கள் உள்ளன. அத்திவ்ய தேசப் பெருமாளும் தலைமையான திருநாங்கூருக்குத் தை அமாவாசையில் ஏக கருட சேவையாக இரவில் பவனி வருவது கண்கொள்ளாக் காட்சியாகும்.

பரந்தாமன் மூலவர் மூர்த்தியாய் கிழக்கு நோக்கும் சந்நிதியாக வீற்றிருந்த கோலமாய், சேவை சாதிக்கின்றார். உற்சவ மூர்த்தி சதுர்புஜ கோபாலராகக் காட்சி தருகிறார். பலபொருள் தரும் அரி என்பதற்கு ஒளி என்றதோர் உன்னதப் பொருளுண்டு, அதன்படி ஒளிவிளக்காக விளக்கின் ஒளியாகப் பரந்தாமன் ஒளிர்கிறான் என்பது தத்துவமாகும், கடவுள் ஒளியையே ஆடையாகப் போர்த்தியிருப்பவர் என்பதாகப்

பைபிள் வசனம் ஒன்று உண்டு. அதுபோல் ஒளிமயமாகும் அரிமேய திவ்விய தேசமாகும் என்பது கருத்து.

வாணாசூரன் என்பான் அநிருத்தன் எனும் திருமால் பக்தனைச் சிறையில் இட்ட போது கண்ண பிரான் விகடக் கூத்தாக மண்ணால் செய்த குடத்தின் மீது இருந்த வண்ணமாகக் கூத்தாடிக் காட்டியதன் பயனாய் விடுதலையைத் தந்தான் என்பது ஒருவரலாறாகும், இது பற்றிய கருத்தை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் கூறும் பலவேறு கூத்துகளுள் ஒன்றாகக் கூறுகிறார், சிவபெருமான் தன் வலது காலை முயலகன் மீது வைத்த படியே ஆடும் அதிசயம் போல் திருமாலும் குடத்தின் மீதே ஆடிய கூத்தை விநோதமாகக் கூறுவர்.

குடத்தின் மீது எச்சரிக்கை யாயிருந்து கூத்தாடல் போல் அரிய மேய விண்ணகர அரியானவன் பக்தர்களைக் காப்பான் என்பது கருத்து.

அரி என்றால் வண்டு என்ற பொருள் உண்டு. அதற்கேற்ப சோலை அன்றலர்வாய் மதுவுண்டங்கு அளிமுரலும் நாங்கூர் அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே! எனத் திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் நினைந்தவராய் நாம் அனைவரும் குடமாடும் கூத்தனிடம் விடைபெற்றுப் பரந்தாமன் பாமாலையின் முப்பதாம் திவ்ய தேசமாம் திருவண்புருடோத்தமம் வந்து சேர்கின்றோம்.

நாங்கூரின் ஒரு பகுதியே இத்திவ்ய தலமும் ஆகும். நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கும் பரந்தாமனை, மீனவர் நமக்கு மனித குலத்தில் சகல உத்தம கல்யாண குண விசேடம் நிரம்பிய உத்தமோத்தம மகாபுருடனாய் விளங்குவதாகக் காட்டுகிறார்.

அங்குள்ள திருப்பாற்கடல் தீர்த்தம் உபமன்யு முனிவர்க்குப் பாலமுதம் தந்ததாகக் கூறுவதுண்டு, திருமங்கை மன்னர், வம்புலாம் கமுகு கோங்கு ஓங்கிய நாங்கூர் வண்புருடோத்தமம் என்றும் வல்ல அந்தணர் மல்கிய வண்புருடோத்தமம் என்றும் மங்களா சாசனம் செய்துள்ளார்.

இங்குள்ள பரந்தாமனுக்குப் புருடோத்தமன் எனப் பெயர்வரக் காரணம் கூறுவார் பேரல மீனவர்,

வில் ஒன்றால் இராவணனை வீழ்த்தியவன் தாதையுரை சொல் ஒன்றால் நாடகன்ற சோதியான், வாழ்வினிலே இல் ஒன்றே என வாழ்ந்தான் இருந்த புருடோத்தமமே (1) என்கிறார், புருடோத்தமம் என்ற ஊர்ப்பெயர் ஒருவனுக்கு ஒருத்தி என்றும் ஒருத்திக்கு ஒருவன் என்றும் கூறும் இல்லற மாண்பை நிலை நிறுத்திய உத்தமனான இராமனால் வந்த பெயர் என்பது கருத்து, சங்க நூலில் மாண்ட என் மனைவியொடு எனப் பிசிராந்தையார் வாக்கு மூலம் தந்தது போல ஓர்இல் (ஒரு மனைவி) என்றபண்புக்குரிய புருட உத்தமன் வாழும் ஊர் என்பது கருத்து, இதைத் தான் உத்தமனாய் வாழும் ஒரு புருடோத்தம நம்பி என (4) மீண்டும் மீனவர் கூறப் பரந்தாமனைச் சேவித்த வாறாய்த் திருச்செம்பொன் செய் கோவிலுக்குச் செல்கின்றோம்.

*(தொடரும்...)*

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 5. திருஅன்பில் என்னும் மண்டுகபுரி

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் ஐந்தாவது திவ்யதேசம், திரு அன்பில் என்ற மண்டுகபுரி. சோழநாட்டுத் திருப்பதிகளுள், இது ஐந்தாவது திருத்தலமாகும்.

கொள்ளிடம் நதியின் வடகரையில் அன்பில் என்ற இவ்வைணவத் திருத்தலம் அமைந்துள்ளது. அன்பிலில், சத்யவாகீஸ்வரரும் சௌந்திரநாயகியும் எழுந்தருளியிருக்கும் அன்பிலாலந்துறை என்ற சைவத் திருத்தலமும் அமைந்துள்ளது.

ஒரு சமயம், படைக்கும் கடவுளாகிய பிரம்மாவுக்கு, இவ்வுலகில் ஒவ்வொரு உயிரும் அழகுடன் இருப்பதற்கு மூலாதாரமாக இருக்கும் தாம் தான் அனைவரிலும் அழகானவர் என்ற ஆணவம் உண்டானது. பிரம்மாவின் ஆணவத்தைவிட்டுவிடும்படி, மகாவிஷ்ணு சொல்லிப்பார்த்தார். பிரம்மாகேட்பதாக இல்லை. அதனால், மகாவிஷ்ணு, பிரம்மாவைப் பூலோகத்தில் சாதாரணமனிதனாகப் பிறக்கும்படி சபித்துவிட்டார்.

பூலோகம் வந்தபிரம்மா, ஒவ்வொருதலத்திற்கும் சென்று சுவாமியை வணங்கித் தன் தவறுக்கு மன்னிப்புக் கேட்டார். இத்தலத்தில் அவர், சுவாமியை எண்ணித் தவமிருந்த பொழுது, மகாவிஷ்ணு பேரழகுவாய்ந்த மனிதராக அவர்முன் வந்தார். அவரது பேரழகைக் கண்டுவியந்த பிரம்மா, இவ்வளவு அழகான எவரையும் இதுவரையில் நான் பார்த்ததில்லையே! நீங்கள் எங்கிருந்துவருகின்றீர்கள்? எனக் கேட்டார்.

அதற்குவிஷ்ணு, அழகு என்பது நிலையற்றது. ஆணவம் ஒருவனை அழிக்கக் கூடியது. இவ்விரண்டுகுணங்களைக் கொண்டவர் எவரும் சிறப்பான வாழ்க்கையைப் பெறுவதில்லை என உபதேசம் செய்து, பள்ளிகொண்ட கோலத்தில் பிரம்மாவுக்குக் காட்சிதந்தார். உண்மையை உணர்ந்த பிரம்மா, ஆணவம் ஒழியப் பெற்றார். பிரம்மாவின் வேண்டுதலுக்காக விஷ்ணு இத்தலத்தில் பள்ளி கொண்ட கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.

பிரம்மாவின் மீது அன்பு கொண்டு அவருக்காக மகாவிஷ்ணு எழுந்தருளியதலம் என்பதால், இத்தலம் அன்பில் என்ற பெயர் பெற்றது.

மூலவர் : வடிவழகியநம்பி
உற்சவர் : சுந்தரராஜப் பெருமாள்
தாயார் : அழகியவல்லி என்ற சுந்தரவல்லிநாச்சியார்
விமானம் : தாரகவிமானம்
தீர்த்தம் : மண்டுக புஷ்கரிணி
தலவிருட்சம் : தாழம்பூ
கோலம் : கிழக்கு நோக்கிக் கிடந்த திருக்கோலம்

சோழர்களால் கட்டப்பட்ட இராஜகோபுரம் மூன்றுநிலைகளைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. சுந்தரசோழன், ஒவ்வொருமுறையும் போருக்குச் செல்வதற்கு முன், தன் உடைவாளைக்கோயிலின் த்வஜஸ்தம்பத்தின் முன் வைத்து, பெருமாளைவணங்கிச் செல்வதாகக் கல்வெட்டுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

முன்மண்டபத்தில் ஆண்டாள் தனிச்சன்னதியில் தெற்கு நோக்கி நின்ற கோலத்தில் இருக்க, உற்சவர் ஆண்டாள் அமர்ந்தகோலத்தில்

இருக்கின்றாள். இவ்வாறு ஒரே சமயத்தில் ஆண்டாளின் இருகோலங்களையும் இத்தலத்தில் தரிசிக்கலாம். திருமணதோஷம் உள்ளவர்கள் இவளை வேண்டிக் கொண்டால், திருமணம் நடக்கும் என்பது நம்பிக்கை.

இத்தலம் லால்குடியிலிருந்து 8கி.மீ தொலைவில், கல்லணையிலிருந்து கும்பகோணம் செல்லும் பேருந்துப் பாதையில் அமைந்துள்ளது.

என் அய்யாகாப்பியக் கவிஞர் நா. மீனவனார், திரு அன்பில் குறித்து எழுதிய ஐந்துபாடல்கள் இதோ!

1. திருமழிசை ஆழ்வார், நான்முகன் திருவந்தாதியில் ஒருபாசுரத்தில் இத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளார். திரு அன்பில் தலத்திலுள்ள இப்பெருமான், திருமழிசை ஆழ்வாரின் ஒரேயொருமங்களாசாசனப் பாடலை, பெருமைமிகு மாலையாய்ப் பெற்றுவாழ்கின்றான். அப்பதியைத் தேடிச் சென்று தினம் சேவிப்போர், அப்பெருமாளின் திருவருளைப் பெற்றவர்களே எனக் கூறும் முதல் பாடல்.

**தேடரியநெடுமால் திருஅன்பில் பதியுகந்தான்**
**பாடரியதிருமழிசை ஆழ்வாரின் பாசுரங்கள்**
**பீடுடையமாலையெனப்பெற்றவனாய் வாழ்பதியைத்**
**தேடிநிதம் சேவித்தோர் திருவருளைப்பெற்றோரே.**

2. சுதபா என்னும் மகரிஷி ஒருவர் தண்ணீருக்குள் மூழ்கித்தவம் செய்வதில் பெரும் சக்தி பெற்றுவிளங்கினார். இவர் ஒருசமயம் தண்ணீருக்கு அடியில் தவத்தில் ஈடுபட்டிருக்கும் போது இவரைக்காண வந்த துர்வாச முனிவர் வெகுநேரம் காத்திருந்தார். ஆனால் மகரிஷியோ தவத்திலிருந்து மீளவில்லை. இதனால் தன்னை அலட்சியப்படுத்துவதாகக் கருதியதுர்வாசர்சினந்து, இம் முனிவரைமண்டுகமாகவே, அதாவது தவளையாகவே போகுமாறு சபித்தார். இதனால் சுதபாமகரிஷி, மண்டுக மகரிஷியானார்.

இந்தமண்டுக மகரிஷி இத்தலத்தில் உள்ள தீர்த்தத்தில் தவமிருந்தார். மஹாவிஷ்ணு அவருக்கு சுந்தரராஜராகப்

பிரத்யட்சமாகி துர்வாச முனிவரின் சாபத்தை நீக்கினார். இதனால் இத்தலத்திற்கு மண்டுகபுரி என்ற பெயரும் உண்டு. மண்டுக முனிவருக்குவரம் தந்ததிருமால் வாழ்கின்ற அன்பில் திருத்தலத்தை நாமும் வணங்குவோம் எனக் கூறும் இரண்டாம் பாடல்.

**தண்ணீருள் மூழ்கித்தவங்கிடந்தமண்டுகர்**
**எண்ணுபுகழ் துர்வாசர் இட்டதொருசாபத்தால்**
**உண்ணீருள் தவளையாய் உருமாறி இருந்தமையால்**
**நண்ணிவரம் தருமால்வாழ் அன்பிலைநாம் வணங்குதுமே.**

3. நான்முகன், தான்தான் அழகு என்று ஆணவம் கொண்டிருக்கையில், அவரைப் பூலோகத்தில் பிறக்கச் செய்து, அவரைவிடப் பேரழகாய் சுந்தரராஜப் பெருமாளாய், பிரம்மனுக்குக் காட்சிதந்தார். திருக்கரம்பனூர் என்ற உத்தமர் கோயிலில் தன் பிரம்மஹத்திதோஷம் நீங்கப்பெற்றசிவன், இத்தலம் வந்து இங்குள்ள பெருமாளைத்தரிசித்துவிட்டுச் சென்றார். தேவலோகக் கன்னியான ஊர்வசிதன் அழகுமீது கர்வம் வந்துவிடாமல் இருப்பதற்காக வணங்கிச் சென்றுள்ளாள். இம்மூவரும் வணங்கிப் பேறுபெற்றதலமான அன்பிலே அழகிய வல்லி நாச்சியாருடன் இருக்கும் பெருமானை வணங்கிப் போற்றச் சொல்லும் மூன்றாம் பாடல்:

**நான்முகனார் சிவபெருமான் நங்கைஎழில் ஊர்வசியாள்**
**தான்வணங்கிப் பேறுபெற்றதலமான அன்பிலிலே**
**மானேந்திமைத்துனனார்மங்கைஎழில் வல்லியுடன்**
**தானமர்ந்தார்நாம்வணங்கித் தலையாரப் போற்றுதுமே.**

4. அமுதத்தை அருந்துவதற்காக, தேவர்களும் அசுரர்களும், மந்திரமலையைமத்தாகவும், வாசுகிப் பாம்பைக் கயிறாகவும் கொண்டுபாற்கடலைக் கடைந்தனர். மந்திரமலையின் கனம் காரணமாக, அதுபாற்கடலுக்குள் மூழ்குவதைக் கண்டு, திருமால் ஆமையாகக் கூர்ம அவதாரம் எடுத்து, பாற்கடலில் நீந்தியவண்ணம் மந்திரமலையைத் தம் முதுகின் மேல் தாங்கி, பாற்கடலைக் கடையத் துணைபுரிந்தார். இறுதியில், திருமாலின் அம்சமானதன்வந்திரி அமிர்தகலசத்துடன் வெளிப்பட்டார். விஷ்ணுமோகினி அவதாரம் எடுத்து அசுரர்களை மயக்கி, தேவர்கள் அமுதம் அருந்துமாறு

செய்தார். அவ்வாறு தேவர்களை அமுதம் உண்ணவைத்தசுந்தரராஜப் பெருமாள் இருந்தருள்கின்ற அன்பில் நகருக்குவருவாரின் வினையகலுமெனக் கூறும் நான்காம் பாடல்:

**மந்தரத்தால் கடல்கடைந்தோர்மகிழ்ந்தமுதம் உண்ணவைத்த**
**சுந்தர ராசன்ஓர் சுடராழி கைக்கொண்டான்**
**அந்தரத்தார் பெருந்தெய்வம் அடியாலே உலகளந்தான்**
**வந்தருளும் அன்பில் நகர் வருவார் வினையகல்வார்.**

5. சிவந்தவிழிகளை உடையவனை, நான்கு தாமரை மலர்களைக் கைகளில் உடையவனை, நாபியில் நான்முகனைக் கொண்டவனை, துளவமாலையை அணிந்தவனை, மகாபாரதப் போரில் வில்விஜயன் அர்ச்சுனனுக்குச் சாரதியாய் இருந்தவனை, அன்பில் நகர் சேர்ந்தவனை வாழ்த்திக் கூறும் ஐந்தாம் பாடல் :

**கார்கடலான் செவ்விழியான் கரகமலம் நான்குடையான்**
**ஏர்வயிற்றில் நான்முகனைக் கமலத்தில் ஏந்தியவன்**
**தார்துளவம் எனக் கொண்டான் தனிப் பெரியவிசயனுக்குத்**
**தேர்நடத்தி அன்பில் நகர் சேர்ந்தானை வாழ்த்துதுமே.**

குடந்தை என்னும் கும்பகோணத்திலும், வெஃகா என்னும் காஞ்சிபுரத்திலும், திருஎவ்வுள் என்ற திருவள்ளூரிலும், அரங்கம் என்ற திருவரங்கத்திலும், பேர் என்னும் திருப்பேர் நகரிலும், அன்பில் என்னும் இந்தத் திருஅன்பில் தலத்திலும், நாகத்தில் பள்ளி கொண்டுள்ள பெருமாள் வேறுயாருமல்ல! அவன்தான் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள ஆதி நெடுமாலாகும். அவன் தன்னை ஆராதிப்பவர்களை அணைத்துக் காப்பவன் எனக் கூறும் திருமழிசை ஆழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

**நாகத் தணைக் குடந்தைவெஃகாதிருஎவ்வுள்**
**நாகத் தணையரங்கம் பேர் அன்பில் - நாகத்**
**தணைப் பாற்கடல் கிடக்கும் ஆதிநெடுமால்**
**அணைப்பார் கருத்தனா வன்.**

*(தொடரும்...)*

# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

## 18

ஒரு காரியம் தொடங்கினால் இடையில் சந்தேகம் கொள்ளாமல், மன ஒருமைப்பாடு கொண்டு தொடர்ந்து செயலாற்ற வேண்டும். அப்படிச் செயல்பட்டால் தான் வெற்றிகிட்டும்; ஒரு மனிதன் கிணறு வெட்ட ஆரம்பித்தான்; இருபது அடி ஆழம் வெட்டினான்; தண்ணீர் வரவில்லை; தண்ணீர் வருமோ, வராதோ என்று சந்தேகம் கொண்டான்; வேறு ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து வெட்டத் தொடங்கினான்; அவன் எதிர் பார்த்த ஆழத்தில் அங்கேயும் தண்ணீர் கிடைக்கவில்லை; எனவே வேறு ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அங்கே வெட்டினான்; தண்ணீர் கிடைக்கவில்லை. ஒரே இடத்தில், ஒரே நோக்கத்தோடு, சந்தேகப்படாமல் ஒரே முயற்சியாகத் தோண்டியிருந்தால் அவனுக்குத் தண்ணீர் கிடைத்திருக்கும்.

## 19

வாழ்க்கைப் பாதை என்பது கல்லும் முள்ளும் நிரம்பிய கரட்டு முரட்டுப் பாதைதான். வெறும் காலால் நடக்க முடியாது. பாதை முழுவதையும் தோலால் மூடிவைத்தால் எளிதாகக் கடக்க முடியும் என்று கருதினால், அது சுலபமல்ல; எனவே, ஒருவன் தனது கால்களுக்கு மட்டும் காலணிகள் போட்டுக் கொண்டால் அது தான் இயலக் கூடிய காரியம்; கால்களில் செருப்பு அணிந்து கொண்டால் கரடு முரடான பாதையில் நடந்து சென்று விடலாம்.

## 20

பூமியில் நின்று கொண்டிருக்கும் ஒருவனுக்குப் புல் சிறிதாய்த் தோன்றும், மரம் மிகப் பெரிதாய்த் தோன்றும். புல் சிறிது! மரம் பெரிது! என்று வேறுபடுத்தி வியப்படையத் தோன்றும்! ஆனால், அந்த மனிதன் மலையின் உச்சிக்குச் சென்று, அங்கிருந்து பார்த்தால், புல்லும், மரமும் ஏதோ ஒரு சிறு புள்ளியாய், வேறுபாடு இன்றி ஒரே மாதிரிதான் தோன்றும்; அதுபோல, ஒருவன் தெய்வதரிசனம் என்ற மலை உச்சிக்குச் சென்று அங்கிருந்து பார்த்தால் பேதங்கள் தென்படுவதில்லை; உறவு, பகை, உயர்வு – தாழ்வு என்ற பேதங்கள் தென்படுவதில்லை;

## 21

உலகத்தில் உள்ள பொருள்கள் எல்லாம் ஈஸ்வரனின் சொரூபங்களே என்று சீடனுக்குக் குரு உபதேசம் செய்தார். இதன் உட்பொருளைச் சீடன் ஆழமாகப் புரிந்து கொள்ளவில்லை; ஒரு நாள், இந்தச் சீடன் தெருவழியே போய்க் கொண்டிருந்தான். அப்போது எதிரே யானை வந்தது; யானையின் மீது இருந்த பாகன் விலகுங்கள், விலகிச் செல்லுங்கள் என்று எச்சரித்தான். இந்தச் சீடன், நான் ஏன் விலகிச் செல்ல வேண்டும் நானும் ஈஸ்வரனின் சொரூபம்; யானையும் ஈஸ்வரனின் சொரூபம், ஈஸ்வரன் ஈஸ்வரனுக்காக ஏன் விலகிச் செல்ல வேண்டும் என்று யானைக்கு நேர் எதிரே சென்றான். யானை சட்டென்று இந்தச் சீடனைத் தூக்கிக் கீழே போட்டுவிட்டது. காயம் அடைந்த சீடன், குருவிடம் சென்று நானும் ஈஸ்வரனின் சொரூபம் தானே, அப்படி இருக்க, இந்த யானை என்னை ஏன் தாக்கித் தள்ளிவிட்டது. என்று புகார் கூறினான். அப்போது குரு சொன்னார். அதெல்லாம் சரி, யானை மீது அமர்ந்திருந்த யானைப் பாகனும் ஈஸ்வரனின் சொரூபம் தானே, அந்த ஈஸ்வரன் சொன்னதை நீ கேட்டு விலகிச் சென்றிருக்கலாமே என்றார்.

## 22

ஒரு தூணைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, ஒரு பையன், வெகுவேகமாகச் சுற்றிச் சுற்றி வருகிறான்; அப்படிச் சுற்றும் போது, அவனுடைய ஞாபகம் முழுவதும், அந்தத் தூணின் மேலேயே இருக்கிறது; தூணை உறுதியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் வரையில், தான் கீழே விழிப்போவதில்லை என்பதை அவன் அறிவான்; கைப்பிடியை விட்டுவிட்டால், அவன் உடனே கீழே விழுந்து விடுவான்; அந்தப் பையனைப் போல, உன் மனத்தைக் கடவுளிடம் நிலை நிறுத்தி, செய்ய வேண்டிய கடமைகளைச் செய்; கடவுளிடம் மனத்தை நிலை நிறுத்தாமல் சுற்றினால் கீழே விழுந்துவிட வேண்டி வரும்.

## 23

ஒரு பூனைக் குட்டிக்கு என்ன தெரியும்? தாய்ப்பூனை வைத்துவிட்டுப் போன இடத்திலிருந்து மியாவ், மியாவ் என்று கத்த மட்டுமே தெரியும். தாய்ப் பூனை, தனது குட்டியை எந்த இடத்தில் வைக்க முடியுமோ அந்த அந்த இடத்தில் வைத்துவிட்டுப் போய்விடும்; அந்த இடம் சில நேரம்

அது ஒரு சமையல் அறையாக இருக்கும்; சில சமயம் அது ஒரு குப்பை மேடாகவும் இருக்கும்; சில சமயம் ஓர் அழகான மெத்தை மீதாகவும் இருக்கும். எந்த இடமாக இருந்தாலும், பூனைக்குட்டி கஷ்டம் ஏற்படும் போது மியாவ், மியாவ் என்று சிறுகுரல் கொடுத்தால் போதும்; தாய்ப்பூனை எங்கிருந்தாலும் ஓடிவந்துவிடும்; அப்படித்தான் பக்தன் எந்த இடத்தில் இருந்தாலும், அழைத்தால், அழைப்பை ஏற்று வந்து இறைவன் காட்சி தந்து விடுவான்.

*(தொடரும்...)*

## சீனத்தில் சிவன் கோயில் - நகரத்தார்களின் பங்கு

**(மா. இளங்கோ, குழிபிறை)**

### *சீனாவின் குவான்சோ நகரம்*

குவான்சோ துறைமுகத்திற்குத் தமிழ்வணிகர்கள், அரேபியர்கள், யவனர்கள், சிரியர்கள் உள்ளிட்ட அனைத்து வணிகர்களும் வருகை தந்தனர். குவான்சோ நகரத்துடன் ஆன வணிக உறவு தொடங்கிய காலத்தை அறுதியிட்டுக் கூற இயலாத நிலையே இன்றைக்கும் இருக்கிறது. கடல் வணிகம் குவான்சோ நகரில் மிக வளர்ந்த நிலையில் இருந்தது.

மங்கோலிய மன்னனான குப்ளாய்கானின் ஆதிக்கத்தில் சீனாவானது 1220 முதல் 1294 வரை இருந்தது. சீனா முழுவதும் அவனது ஆதிக்கத்தில் இருந்தது. யுவான் வம்சத்தைத் (Yuan Dynasty) தோற்றுவித்தவர் குப்ளாய்கான் ஆவார். புகழ் பெற்ற மங்கோலிய மன்னனான செங்கிஸ்கானின் பெயரன் தான் குப்ளாய்கான். குப்ளாய்கானின் முழுப்பெயர் குப்ளாய்செக்சாய்கான்.

சீனாவில் குப்ளாய்கான் ஆட்சி நடந்த பொழுது தமிழகத்தில் பாண்டியர்களின் ஆட்சி சிறப்பாக நடந்து கொண்டிருந்தது. அந்நேரத்தில் குப்ளாய்கானின் உடல்நிலை சீர்கேடு அடைந்ததால் குப்ளாய்கான் உடல் நலம் பெற வேண்டி, சிவன்கோயில் கட்டப்பட்டதாக அக்கோயில் கல்வெட்டு தெரிவிக்கிறது. குப்ளாய் கானின் பெயரின் ஈற்றில் உள்ள கான் என்ற பெயரை அடிப்படையாகக் கொண்டு அக்கோயிலின் இறைவன் திருக்கானீசுவரர்; ஆலயம் இருந்திருக்க

வேண்டும் என்பது சிதைந்த நிலையில் கிடைத்திருக்கும் கோயிலின் பாகங்கள் மூலம் தெரிகிறது. அக்கோயில் தமிழகக் கட்டிடக்கலையை முழுமையாக வெளிப்படுத்துகிறது.

குப்ளாய்கானின் யுவான் வம்சம் வீழ்த்தப் பெற்று, சீனர்களின் மிங் வம்சம் மீண்டும் ஆட்சிக்கு வருகிறது. அவர்கள் ஆட்சிக்கு வந்ததும் புத்த சமயத்திற்கு மாற்றாக இருந்த அனைத்து வழிபாட்டுத் தலங்களையும் அழிவுக்கு உள்ளாக்கினர். இச் சிவன் கோயிலும் அழிக்கப் பெற்றது.

சிவன் கோயிலில் இருந்த சிற்பங்கள், தூண்கள் உள்ளிட்ட கோயில் பாகங்கள் அனைத்தும் சிதறிய நிலையில் குவான்சோ நகரின் பல பகுதிகளிலும் கண்டெடுக்கப் பெற்றது. அவை அனைத்தும் குவான்சோ கடல் சார் அரும்பொருள் காட்சியகத்திலும் குவான்சோ பல்கலைக் கழகத்திலும் காட்சிக்கு வைக்கப் பெற்றிருப்பதை இன்றும் காணலாம்.

அக்கோயிலின் தமிழ்க் கல்வெட்டு ஒன்று பாதுகாக்கப் பெற்று வருகிறது. இக்கல்வெட்டு கி.பி. 1281-ஐச் சார்ந்தது.

Bilingual Tamil-Chinese Inscription, C.1281
Xlamen University Museum

தமிழ் சீனக் கல்வெட்டு கி.பி.1281 ஸியாமென் பல்கலைக்கழக அருங்காட்சியகம். அக் கல்வெட்டு கீழ்க்கண்டவாறு படிக்கப்பட்டது.

வரி 1 – ஹர: ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப்தம் 1203வது சித்திரை
2 – சித்திரை நாள் ஸ்ரீசெக் செகான் திருமேனிக்கு நன்
3 – றாக உடையார் திருக் கானீச்சுரமுடைய நாயனாரை
4 – ஏறியருளப்பண்ணினார் சம்பந்தப் பெருமாள்
5 – ஆன தவச்சக்கரவர்த்திகள் செகாய்கான் பர்மான்
6 – படி

தமிழக வணிக வரலாற்றில் ஆற்றல் மிகுந்தவர்களாகத் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக் குழுவே இருந்தது. அக்குழுவே சீனாவிலும் சிறப்பாகச் செயல்பட்டிருக்க வேண்டும்.

தென்னிந்தியா முழுவதும், இந்தோனேசியா, மலேசியா, இலங்கை நாடுகளை வென்று பேரரசை நிறுவிய சோழ மன்னர்களின்

நம்பிக்கைக்கு உரியவர்களாக திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக் குழுவே இருந்திருக்கிறது.

இந்தியப் பெருங்கடலில் ஆற்றல் மிகுந்தவர்களாக மிக நீண்ட காலம் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக் குழுவே இருந்திருக்கிறது.

இந்தோனேசிய துறைமுகங்களிலும், நாட்டிலும் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக்குழுவே சிறப்பாகச் செயல்பட்டு வந்திருக்கிறது. இந்தோனேசியத் துறைமுகம் ஒன்றில் கண்டெடுக்கப்பட்டு இந்தோனேசிய அருங்காட்சியகத்தில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வரும் கல்நங்கூரம் ஒன்றில் திசையாயிரத்து ஐநூற்றுவர் என்ற வரி பொறிக்கப் பெற்று உள்ளது. இந்த நங்கூரம் 15 -ம் நூற்றாண்டைச் சார்ந்தது.

தாய்லாந்து, மலேசியா, வியட்நாமிலும் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக்குழுவே இருந்திருக்கிறது.

சீன நாட்டிலும் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக் குழுவே வலிமையுடன் இருந்திருக்க வேண்டும். அவர்களின் பெரும்பங்களிப்பு இல்லாமல் திருக்கானீசுவரர் கோயில் கட்டியிருக்க இயலாது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக் குழுவின் அடையாளங்களைக் காலம் காலமாகச் சுமந்து வந்திருப்பவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்களே. இந்த வரலாற்று அடையாளங்கள் இன்றைய நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கு நெருக்கமாக இருக்கும் அளவிற்கு மற்றவர்களுக்கு இல்லை.

இன்றைய நாட்களில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் என அழைக்கப்படுகின்ற சமூகம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த பண்பாட்டு அடையாளங்களை இன்றும் கைவிடாமல் பின்பற்றி வருகிறது.

ஆகவே, கேரள சிங்கவள நாட்டைச் சேர்ந்த நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் திசையாயிரத்து ஐநூற்றுவர் என்ற வணிகக் குழுவைச் சார்ந்தவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆவர்.

திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக்குழு கால வெள்ளத்தில் பல கிளை ஆறுகளை உருவாக்கி இருக்கலாம்.

ஒரு சமூகம் பல பிரிவுகளாகப் பிரிந்து வெவ்வேறு பெயர்களைப் பெற்றிருக்கலாம். ஆனால் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக் குழுவே நாட்டுக்கோட்டை நகரத்தார்கள். நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் முன்னோர்கள் திசையாயிரத்து ஐநூற்றுவரே என ஐயமின்றிச் சொல்லலாம்.

சீனத்தின் திருக்கானீசுவரர் கோயிலைக் கட்டியதில் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் முன்னோர்களான திசையாயிரத்து ஐநூற்றுவரின் பங்கு பெரிதினும் பெரிது ஆகும்.

## ஏன் வேண்டும் இறையுணர்வு?

(இல.பழனியப்பன்)

ஓய்வு பெற்ற மனித வள மேம்பாட்டு அலுவலர், 9585825150

அன்றாடம் வயிற்றுக்கு உணவு தேடுகிறோம். ஒவ்வொரு வேளையும் தேடுகிறோம். ஆனால் நம்மைப் படைத்து இவ்வுலகில் நடமாடவிட்ட இறைவனை மட்டும் நம்மிலே பலர் தேவை வரும்போது மட்டுமே நினைக்கிறோம். இதில்கூட சந்தர்ப்பவாதம்.

இதைக் கண்ணுற்று வெறுப்பும் சலிப்பும் அடைந்த மகான்கள், ஞானிகள், இரை தேடுவதோடு இறைவனையும் தேடுங்கள் என்று மனித குலத்தைப் பார்த்து மனித குலம் உய்வடையும் மார்க்கத்தைக் காட்டினார்கள்.

நம்மிலே ஒருசிலர் இறைவனைத் தேடுவதால் என்ன ஆதாயம். என் தலைவிதியை மாற்ற முடியுமா? என்று கேட்கிறார்கள். இது வர்த்தக பேரம்தானே.

இறைவனின் படைப்பிலே மிக உயர்வான மனிதப் பிறப்பைத் தந்து இந்த உலகத்தில் உலவ விட்ட ஒன்றுக்காக மட்டுமே நாம் வாழ்நாள் முழுவதும் நன்றிக் கடனாக இறைவனைத் தேடியே ஆக வேண்டும். அதை மறக்கலாமா?

இறைவன் பொம்மலாட்டக்காரன்; நம்மை ஆட்டுவிப்பவன். முதலும் முடிவும் கடந்தவன். உருவம் இல்லாதவன். எல்லா உயிரிலும் எல்லாப் பொருளிலும் இரண்டறக் கலந்தவன்.

ஒரே நாளில் சில உயிர்களைப் படைப்பதையும், சில உயிர்களை எடுப்பதையும் செய்யும் ஆற்றல் பெற்றவன்.

**அலகிலா விளையாட்டுடையவன்**

என இந்த முடிவில்லாத விளையாட்டை கவிச்சக்கரவர்த்தி கம்பர் குறிப்பிடுகிறார்.

அவனது அற்புத விளையாட்டை மேற்கண்டவாறு படம் பிடித்துக் காட்டிய அந்த இறைவனை மட்டுமே தொழுவேன். அவனே எனக்குத் தலைவன் என்று ஆணித்தரமாக அன்றே அவர் சொல்லியுள்ளார்.

நாம் அறியாமல் அன்றாடம் தவித்துக் கொண்டிருக்கிறோம். நம்மைப் பிடிவாதமும் தன் முனைப்பாகிய ஆணவமும் அன்றாடம் ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கின்றன. அது நமது அகக்கண்ணை மறைத்துக் கொண்டிருக்கிறது.

இறைவனைத் தேடி எங்கேயும் அலைய வேண்டாம். உண்மையான இறையுணர்வு நம்பிக்கையோடு இருந்த இடத்தில் இருந்து வழிபட்டால் கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வருவான் அந்த ஒப்பற்ற இறைவன்.

ஆறு விதமான உட்பகைகளான காமம், வெறுப்பு, கோபம், அகங்காரம், பேராசை, பொறாமை ஆகியவற்றை ஒழித்தாலே எளிதில் இறைவனைக் காணலாம்.

சடங்குகளைத் தேடி அலைய வேண்டாம். மந்திரங்கள் புரிந்து சொல்ல வேண்டும். புரியாமல் சொல்லப்படும் மந்திரமே வாழ்விலும், சாவிலும் இன்று நமக்கு முன்னிலை வகிக்கிறது.

கண்களை மூடிக் கொண்டே மனதை ஒரு நிலைப்படுத்தும் தியானமும் சிறந்த வழி. ஆனால் மிகமிகச் சோதனையான வழி. கருணைக்கடலான இறைவன் ஒருவனே. ஆம். ஒன்றே குலம் ஒருவனே தேவன்.

சித்தர் திருமூலரின் இந்த வாக்கே தெய்வீக வாக்கு. இறைவனை

அடையும் வழிகளாகிய மார்க்கங்களை, இறையுணர்வைப் பரப்பவந்த சமயங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. இந்துமதம் உருவ வழிபாட்டின் மூலம் இறைவனை நமக்கு அறிமுகப்படுத்துகிறது.

கிறிஸ்துவ மதம் இறைத் தூதரை இறைவனாக முன்னிறுத்துகிறது. இசுலாமியர் உருவமற்ற இறைவனை எல்லா உயிரிலும் கண்டு வழிபடுகிறார்கள். இவை எல்லாமே இறையுணர்வுக்கான வழிகளே. ஆனால் நாம் இன்று சமயங்களின் பெயரால் பேத உணர்வை வளர்த்து மக்களைத் திசை திருப்பிக் கொண்டிருக்கிறோம். எந்த வழியில் போனாலும் போய்ச் சேர வேண்டிய இடம் ஒன்றுதானே. இது புரிய வேண்டாமா? இதற்கு ஏன் வீண் சண்டை. உண்மையான இறையுணர்வு உள்ளவர்களை மூன்று விதமான தாபங்களையும், துக்கங்களையும் போக்கிக் காப்பாற்றுகிறது. இது வேதத்தின் குரல்.

1. ஆதியாத்மியம் எனும் உடலுக்கு ஏற்படும் நோய்கள்.

2. ஆதிதைவீகம் எனும் மழை, காற்று புயல் போன்ற இயற்கைச் சீற்றங்கள்.

3. ஆதிபௌதிகம் - பிராணிகளால் ஏற்படும் துன்பம்.

இறைவன் நமக்குத் தாயாக (தாயுமானவர்), தந்தையாக, நண்பனாக அன்றாடம் மனித வடிவத்தில் காட்சிதந்து நம்மை உய்விக்கிறார்.

ஈசுவரனாகிய கயிலைநாதர் சுந்தரருக்குத் தோழனாக வந்தாரே. அர்ச்சுனனுக்கு நண்பனாகத் தர்மத்தை நிலைநாட்ட சேஷசாயி வந்தாரே அது நினைவில்லையா? தாமாஜி என்ற பக்தருக்காக ருக்மணியின் கணவன் பாண்டுரெங்கன் குயவராக உருமாறி வந்தது உண்மைதானே.

இறைவனை அடைய மாயை மோகத்தை உணர்ந்த வைராக்கிய உணர்வாகிய மன உறுதியே அதிகம் தேவை.

| | | |
|---|---|---|
| இறைவன் | - | பசு |
| நாம் | - | கன்றுகள் |
| இறைவன் | - | சந்தனம் |
| மனிதர்கள் | - | முள் அடர்ந்த புதர் |

இந்தப் புதர்களின் கெட்ட குணங்களைப் போக்குவதே இறைவனின் பணி. இறையருள் என்பது இறைவன் நம்மை ஏற்றுக் கொள்வதாகும். கடவுள் நினைத்தால் கடல் நீரும் மாறும். அவன் அருள் இன்றி ஒரு அணுகூட அசையாது என்பதும் அசைக்க முடியாத உண்மையே. வள்ளலார் காட்டிய சமரச சன்மார்க்க அடிப்படையில் அறிஞர் காப்மேர் நம்மை மீறிய சக்தியை இறைவனாக நம்மை நம்பி ஏற்றுக் கொள்ளுங்கள். அதன் மூலம்

உடல் உயர்வு

மன உயர்வு

ஆன்மிக உயர்வு

ஆகிய மூன்றும் கிட்டும் என்கிறார். காணிக்கை, சடங்குகள், கடவுளை நிறைவுபடுத்தாது என்ற ஞானிகளின் கருத்தையும், காப்மேர் எதிரொலிக்கவே செய்கிறார்.

இறையுணர்வை ஊட்ட, நாம் இறைவனை அடைய வழிகாட்டுபவரே குரு ஆவார். அந்தக் குரு இறைவனுக்கும் நமக்கும் பாலமாக இருப்பார். என் மூலமின்றி யாரும் இறைவனைக் காண முடியாது என்கிறார் இறைதூதர் ஏசுநாதர். அப்படிப்பட்ட குருவை நாம் எப்படி அடையாளம் காண்பது? அவரை நாம் தேடி அலைய வேண்டாம். அவரை ஏற்றுக் கொள்ள நாம் தயார் நிலையில் இருந்தால் அவரே நம்மைத் தேடி வருவார்.

அப்பரடிகள் இறைவனை விறகில் தீயினன் – விறகுக்குள் இருக்கும் தீ போன்றவன். பாலில் இருக்கும் நெய் போன்றவன். கண்ணுக்கு நேரடியாகத் தெரியாததால் இல்லை என்று சொல்வது பெரும் பாவம் என்கிறார்.

மனம் அலைபோல அலையும். அது நிற்கும்போது தியானம் துவங்கும். மனதை அடை என்னைக் காணலாம். இது பகவானின் வேதமொழி. மனத்தை அடக்க நினைத்தால் அலையும். அறிய நினைத்தால் அடங்கும். வேதாந்திரி மகரிஷியின் அருள் வாக்கு.

இறைபணியில் ஈடுபட்டுள்ளவர்களைக் காக்க இறைவன் மற்ற வடிவம் எடுத்து வருவார் என்பது பகவான் ரமண மகரிஷியின் நம்பிக்கை.

சீரடி சாயிபாபா மனித வடிவில் குழுவின் பணியைச் சில நேரங்களில் நேரடியாகவும், சில நேரங்களில் அவரவர் வழிபடும் தெய்வங்களின் வாயிலாகவும் செய்துள்ளார். ஆனால் குருவிடம் சேர்ந்து விடுவதால் மட்டும் ஒருவர் விதியை மாற்ற முடியாது. நல்வினை, தீவினை அடிப்படையிலே நமது வாழ்வு அமைந்துள்ளது. அதனால் குருவைப் பற்றிக் கொள்வதால் விதியைத் தாங்கும் மனவலிமையை அடையலாம். அதுவே மனதால் மிக உயர்ந்த நிலை.

கடவுள் ஒருவரே; அந்தக் கடவுளை ஒளி வடிவில் காண வேண்டும் என்பது வள்ளலார் கொள்கை. இது இன்று உலக அளவில் அனைத்துச் சமயத்தினராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகிறது. சாதி சமயம் கடந்த இறைநெறி அவரது நெறி. எல்லா உயிரையும் தன் உயிர் போல எண்ணும் ஆன்மநேய ஒருமைப்பாடு அவர் கொள்கை.

1867 ல் அவர் நிறுவிய சத்திய தருமச்சாலை இன்றளவும் எல்லோருக்கும் உணவு கொடுத்து வருகிறது. மதம் என்ற வடசொல்லுக்குத் தீவிர நிலை என்று பொருள். அதனால் வள்ளலார் மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும் என்று இறைவனிடம் வேண்டுகிறார்.

தன்னை மீறிய சக்தியே இறைவன். அந்த இறைவன் ஒருவனே. அவன் சாதி, மத, பேதங்களுக்கு அப்பாற்பட்டவன். உண்மையான சமத்துவ நாயகன் என்ற உணர்வோடு நாம் ஒவ்வொருவரும் செயல்பட வேண்டும்.

இன்றைய மனிதகுலத்தின் சீரழிவிற்குப் போலி நம்பிக்கையே காரணம். காசு கொடுத்துப் பரிகாரங்களால் இறைவனின் அருளை ஒரு நாளும் யாரும் பெற முடியாது. இதுவே உண்மை.

அந்த ஒரு இறைவனை எந்தப் பெயரிட்டு வேண்டுமானாலும் வழிபடுங்கள். நம்பிக்கையோடு வழிபடுங்கள். அப்பொழுதுதான் மனசாட்சி, மனித நேயம், மனித உறவுக்குப் பொருள் இருக்கும், நம் எல்லோரிலும் மகா மகாப் பெரியவன் இறைவன் ஒருவனே...! அவனைப் பற்றிக் கொள்ளுங்கள். பற்றில்லாதவனிடம் பற்று வையுங்கள். வள்ளுவர் வழியில் இறையுணர்வை வளர்த்து நாமும் வாழ்ந்து மற்றவரையும் வாழவைப்போம்.

# திருவருட்பிரகாச வள்ளலார்

## வாழ்க்கைக் குறிப்பு

(புலவர் ஆறு.மெய்யாண்டவர்)

தமிழ்நாட்டில் சிதம்பரத்தை அடுத்த மருதூரில் இராமையாப்பிள்ளை, சின்னம்மை ஆகியோரது ஐந்தாவது பிள்ளையாக 05.10.1823 ஆம் ஆண்டு பிறந்தார். சுபானு ஆண்டு(திருவள்ளுவர் ஆண்டு 1854) சித்திரை நட்சத்திரம் ஞாயிறு தான் இம்மண்ணுலகில் வள்ளலார் அருட்பெருஞ்சோதி ஆண்ட வரால் வருவிக்க உற்ற நாள், அகத்தே கறுத்து புறத்தே வெளுத்த சகத்தினைத்திருத்த அருட்பெருஞ்சோதி ஆண்டவரால் இம்மண்ணுலகில் வருவிக்க உற்றார், அதை அவரோவருவிக்க உற்றேன் என்கிறார்.

வள்ளலாரின் இயற்பெயர் இராமலிங்கம்; இளமையில் சென்னையில் வளர்ந்தார், தமையனார் சபாபதிப்பிள்ளை அவரைப் பிள்ளையாய் வளர்த்தார், சபாபதிப்பிள்ளையின் துணைவியார் தனக்கோடி அம்மாள் அண்ணியாராக இல்லாமல் அன்னையாய் இருந்து அவரை வளர்த்தார். சென்னையில் இருந்த காலத்தில் நாள் தோறும் கந்தகோட்ட முருகனையும்,திருவொற்றியூர் வடிவுடை நாயகி அம்மையையும் பட்டினத்தார் ஜீவ சமாதியையும் தரிசித்து வந்தார். கந்தகோட்ட முருகன் மீது தெய்வ மணிமாலை எனும் நூலைப் பாடினார்; திருவொற்றியூர் வடிவுடையம்மை மீது வடிவுடை நாயகி மாணிக்க மாலை பாடினார், திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகளையும் பல திருக்கோவில்களுக்குச் சென்று சென்று பாடியுள்ளார், கருணையும் சிவமும்பொருள் எனக் கொண்டு வேறு எதையும் எண்ணாது ஒரு கடவுட்கொள்கையையும் அருட்பெருஞ்சோதி ஆண்டவரே அக்கடவுள் என்பதையும் நிறுவினார், திருமந்திரம், திருவாசகம், திருக்குறள் தாயுமானவர் திருப்பாடல்களையும் நாள்தோறும் ஓதினார், அவற்றின் உள்ளீடாக விளங்கும் அருட்பெருஞ்சோதிக் கனியைத் தனியாக எடுத்து உலக மக்களினம்

அக்கனியைச் சுவைத்து வாழ மொத்தம் 6000 பாடல்களாக வள்ளலார் தருகிறார்.

இந்நூல் சாதி, சமயம், இனம், மொழி, நிறம், நாடு முதலிய வேறுபாடுகள் அற்ற சமரச சன்மார்க்க சமுதாயம் உருவாக வழிகாட்டுகின்றது, நமது தமிழ்மொழியின் செய்யுள் இலக்கணத்தில் எத்தனை வகை யாப்புகள் உண்டோ அத்தனை வகையாலும் இந்நூல் பாடப் பெற்றுள்ளது, அத்துடன் புத்தம் புதிய இசைப் பாடல்கள் ஆகிய கீர்த்தனைகளும் திருவருட்பாவில் இடம் பெற்றுள்ளன.

முதல் ஐந்து திருமுறைகள் உருவ வழிபாட்டினை உணர்த்துபவை. மனத்தைப் பக்குவப் படுத்த வள்ளற்பெருமானால் பாடப்பட்டவை, ஆறாம் திருமுறை திருஅருட்பெருஞ்சோதி அகவலாகும்.

1872ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 18 ஆம் நாள் திருவருட் பிரகாச வள்ளலார் அருட்பெருஞ்சோதி அகவலை எழுதி முடித்தார், ஒரே இரவில் அடித்தல் திருத்தல் இன்றி எழுதிமுடித்தார், எழுதிய இடம் மேட்டுக் குப்பம் சித்தி வளாகத் திருமாளிகை ஆகும், 24 தாள்களில் கடுக்காய்மையால் 1596 அடிகள் அளவில் இந்நூல் அமைந்துள்ளது.

வள்ளற் பெருமானோடு அவர்காலத்து வாழ்ந்த ஆனந்த நாத சண்முக சரணாலயசுவாமிகள் திருவருட் பிரகாச வள்ளற் பெருமான் அருளிய திருப்பாசுரங்கள் யாவும் சிறந்தனவே ஆயினும் முதல் ஐந்து திருமுறைகள் உருவ வழிபாட்டை உணர்த்தி ஆன்மாக்களை வழிப்படுத்தும் படி நிலைகளாகவும் ஆறாம் திருமுறை சமயம் கடந்த அருவ வழிபாட்டின் மூலம் பரம்பொருள் ஆகிய அருட்பெருஞ்சோதி (பெருங்கருணை) அகவல் ஆனது வள்ளற் பெருமானுக்கு அருட்பெருஞ்சோதி ஆண்டவர் பேரொளிப் பிழம்பாய் அருட் தரிசனம் அளித்த காலை அருளிச் செய்ததாய் உணரப் பெற்றேன் என்று குறிப்பிடுகின்றார், வேதத்தில் ஸ்ரீருத்திரம் போல அருட்பாவுள் அருட்பெருஞ்சோதி அகவல் விளங்குகின்றது, இஃது அருட்பாவின் அட்டவணை என அழகர் அடிகளாரும், திரு. வி. க வும் பாராட்டுகின்றனர்.

உயிர்களின் தோற்றம், திருவருள்திறம், ஐம்பூத நிலைகள், ஐந்தொழில், ஆறு அந்தங்கள், ஏழு திரைகள், கருமயோக ஞான சித்தி

விளக்கம், ஞான சித்தி அனுபவம், அருட்பெருஞ்சோதியின் அருமைபெருமை, ஜோதியை உறவு நிலையில் வைத்தழைக்கும் உரிமை உணர்வுகள் முதலிய அருட் செய்திகளை இந்த அருட்பெருஞ்சோதி அகவல் நமக்கு விளக்குகிறது.

1.முதல் இரு அடிகள் உரை

1.அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி

2.அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி உரை விளக்கம், அருட்பெருஞ்சோதி: பெருங்கருணை வடிவில் விளங்கும் பேரொளிப் பிழம்பாகிய இறைவனே என்கிறார் வள்ளலார், உலகம் விளங்க அருளும் பேரொளி வடிவினனே அருட்பெரும் சோதி ஆண்டவராகிய இறைவன், இது விண்வெளி மண்டலத்தில் பேரொளி நட்சத்திர மண்டலங்களின் பேரொளிக் கூட்டமே (galaxy) கேலக்ஸி என்று அறிவியலாளர் கூறுகின்றனர், இந்த அண்டப் பெருவெளி இயற்கை விளக்கத் தோற்றங்களாய்க் காட்சி அளிக்கின்றது. இந்த அருட்பெருஞ்சோதி நான்கு நிலைகளைக் கொண்டது.

1.வான்வெளி நிறைமின்காந்த ஒளிநிலை (வான் கலந்த பெருஞ்சோ்தி நெருப்புக் கோளம்.

2.விண்மணியாம் ஞாயிற்றின் ஒளிநிலை(சோதிநிலை) இளங்கோ அடிகள் ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றதும் எனக் கூறியது இங்கே நினைவு கொள்ளத்தக்கது.

3.தண்மதி நிறைகலைச் சந்திர சோதிநிலை இங்கே முழு நிலவின் ஒளியைச் சுட்டுகிறார் வள்ளலார்.

4.தீபச் சுடர் விளக்கின் ஒளிநிலை தீபமங்கள ஜோதி நமோ நமோ என்பார் அருணகிரி நாதப் பெருமான்.

இந்த நான்கு ஒளிநிலைகளையும் அகத்தே உணர்ந்து மனிதன் இறைநிலை உணர வேண்டும். இதைத்தான் திருமூலர் உள்ளம் பெருங் கோவில் ஊன் உடம்பு ஆலயம் வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுர வாசல் என உரைத்து மகிழ்ந்தார், அப்பரடிகள் இல்லக விளக்கது இருள் கெடுப்பது சொல்லக விளக்கது சோதி உள்ளது என்பார், ஆக இறைவன் பேரொளி வடிவின்ன் எனவள்ளலார் உணர்த்துகிறார்,

மாணிக்கவாசகர் ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதியை எனத் தம் திருவாசக நூலில் ஒரு பகுதியாக வரும் திருவெம்பாவை முதற்பதிகத்தில் குறிப்பிடுகிறார், வள்ளற்பெருமான் தம் ஞானாசிரியனாகத் திருஞான சம்பந்தரையும் வழிகாட்டியாக மாணிக்கவாசகரையும் ஏற்றுக் கொள்கிறார்; அரும்பெருஞ்சோதியை அருட்பெருஞ்சோதி என மாற்றி வழங்குகிறார் வள்ளலார், இவ்வாறு முதல் இரு அடிகள் அருட் பெருஞ்சோதி என வள்ளலாரால் கூறப்பெற்றன. இனி 2ஆம் ஈரடிகள் அருட் சிவம் என அழைக்கப் பெற்றன.

3.அருட் சிவ நெறிசார் அருட்பெருவாழ்நிலை

4.அருட்சிவபதியாம் அருட் பெருஞ்சோதி என்னும் இந்த இரண்டு அடிகளின் பொருள் பழந்தமிழ் மக்கள் கண்டு வழிபட்ட கடவுள் சோதியாம் கந்தழியே(பற்றுக்கோடு) பின்சிவம் என்னும் செம்பொருளாகக் கற்பிக்கப் பட்டதாகும், சிவம்தானே செங்கதிர்ச் சோதியாம் வானில் தோன்றும் ஞாயிறு(பகலவன், கதிரவன்). இந்தக் கதிரவனையே மேனாட்டார் சன் (Sun) என்றும், கீழை நாட்டார் சியின் எனவும் குறிக்கின்றனர், தமிழன் விண்ணில் தோன்றிய கதிரொளியை முதலில் வணங்கினான், அதை உள்ளத்தில் சோதி வடிவாய்க் கண்டு அகவழிபாட்டில் ஈடுபட்டான். இந்த இறை ஒளியையும் அது ஒளி பெற்று விளங்கும் இடத்தைச் சிவக் குறியாம் இலிங்கமாகவும் ஆவிடையாகவும் கண்டு இதைச் சிவலிங்க வழிபாடாக்கினான்.

கடவுட்சோதியால் உருவான உலகை ஐம்பூதச் சேர்க்கையால் ஐந்து நிறமாய் விளங்கக் கண்டு அதைப் பஞ்சபூத இலிங்க வடிவமாய்க் கண்டான், நமசிவய எனும் தூல ஐந்தெழுத்து மந்திரமாய்ச் சொன்னான், உலகியலார் நமசிவய என்பர், அக்கடவுட் சோதியை உள் ஒளிர் சிவமாய் உணர்ந்து சூக்குமத்திரு ஐந்தெழுத்து மந்திரமாய்ச் சிவாயநம என மனித ஆன்மா மேல் நிலை அடையும் போது கூறினர், இந்தச் சிவநெறி விளக்கமாகவே சைவ சாத்திர தோத்திரங்களும், மறை ஆகமங்களும் மூர்த்தி தல தீர்த்தங்களும் என வழிப்படுத்தினர் சைவப் பெருமக்கள், வள்ளற் பெருமான் அருட் சிவபதியே அருட்பெருஞ்சோதி வழிபாடு எனப் பொது நிலை வழிபாடு கண்டார்.

3. ஆகமம் - ஆரணம்

5. ஆகம முடிமேல் ஆரண முடிமேல்

6. ஆகநின்றோங்கிய அருட்பெருஞ்சோதி ஆகு+இயமம் - இறைவனை வழிபடும் முறையைக் கூறும் ஆகம நூல்கள் ஆரணம். இங்கு இருக்கு யசுர், சாமம், அதர்வணம் ஆகியவேதங்கள் மறை பொருளாய் இருக்கும் இறைவனை அடையத் தேவையான அறம் பொருள், இன்பம் வீடு பேறடையும் வழியைச் சொல்லும் மறைகள், இவை சைவ சித்தாந்த நூல்களாகிய மறைகள், வேதாந்த நெறி பிரம்மம் ஒன்றே உண்மையில் உள்ளது. இதை வடமொழியாளர் ஜெக ஜீவ, பரம் மாயா என்கின்றனர், உலகில் அனைத்தும் மாயையே அல்லது பொய்யே, இந்தப் பொய்யான உடலை விட்டு மெய்யான பிரம்மத்தை அடைவதே உண்மையான இறைவனை அடையும் வழி. இது வேதாந்தம். அதே நேரத்தில் பசு என்னும் உயிர் பாசத்திலிருந்து விடுபட்டுப் பதியை அடைவதே உண்மையான(இறைவனை) இறைவனை உணர, அடையவழி, வள்ளலார் இவ்வாறு மயக்க அறிவில் மயங்காமல் என்றும் நிலையாய் உள்ள பேரொளியை மயக்கமில்லாப் பேரறிவால் வழிபடும் வழிபாடே அருட்பெருஞ்சோதி வழிபாடு, எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிராய் எண்ணி உயிர்க்கருணையோடு இறைவனை வழிபடுவதே அருட்பெருஞ்சோதி வழிபாடு என்கிறார் வள்ளலார், இவ்வழிபாடே சமரசமானது, தூய்மையானது, மெய்ந்நெறி என்கிறார். இதுவே சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் சுட்டும் பொது நிலை வழிபாடு, உயிர்கள் பால் காட்டும் பெருங்கருணையோடு ஒளி வடிவாய் விளங்கும் இறைவனை வழிபட வேண்டும் என்பது வள்ளலார் கண்ட பெருநெறி.

4.இகபரநிலை

7. இகநிலைப் பொருளாய் பரநிலைப் பொருளாய் அகமறப் பொருந்திய அருட்பெருஞ்சோதி. பொருள்: இகநிலைப் பொருளாகிய இவ்வுலக வாழ்வும் இப்பிறப்பில் நாம்வாழும் வாழ்வும் ஆகும், பரநிலைப் பொருளாய் என்பது மேல் உலக வாழ்வு, மறுபிறவி வாழ்வு, இவ்விரண்டையும் உள்ளத்தில் பொருத்தி வருந்தாமல் ஒரே மனத்தோடு உள்ளத்தில் அருட்பெருஞ்சோதியாம் பெருங்கருணை நல்கும் பேரொளி வடிவினராகிய அருட்பெருஞ்சோதி ஆண்டவரை

வழிபடுவதே மெய் வழிபாடு என்கிறார் வள்ளலார். அதையும் எவ்வாறு வழிபட வேண்டும் என்கிறார், யான் எனது என்னும் செருக்கை நீக்கி (அகம்அற - அகங்காரம் நீக்கி) கருணையே வடிவான பேரொளிப்பிழம்பாம் அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வழிபட ஒளி பெறலாம் என்கிறார்.

5.இகபரத்தின் மேற்பொருள்

9.ஈனமின்றிகபரத்திரண்டின் மேற்பொருளாய்

10. ஆனலின்றோங்கிய அருட்பெருஞ்சோதி ஈனம் இன்றி - குற்றமின்றி; இகபரத்து இரண்டின் மேல் பொருளாய் - இப்பிறவியில் வாழும் இவ்வுலக வாழ்வும் அடுத்த பிறவியில் நாம் வாழ்வோம் என எண்ணும் அறிய முடியா வாழ்வும் கடந்து நம்மை மேலான நிலைக்குக் கொண்டு செல்லும் விண்ணில் தோன்றும் வெட்ட வெளியில் தூய கருணை வடிவாம் அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வழிபடுவதே உயிர் இரக்க வழிபாடாம்.

6.உரைமனம் கடந்த வெளி

11.உரை மனங்கடந்த ஒருபெருவெளி

12.அரைசு செய்தோங்கும் அருட்பெருஞ்சோதி

பொருள்:அளவிலாத பேரெல்லை கொண்ட இவ்வுலகையும் அடக்கி ஆளும் வாக்கும் மனமும் கடந்த பேரொளிப் பிழம்பாம் அருட்பெருஞ்சோதி ஆண்டவர் ஆளும் ஆட்சியின் எல்லை மிகப் பெரு வெளியாம், அதைக் கண்ணால் காண இயலாது; அவர் இவ்வுலகை ஆளும் பெருமையை மனத்தால் ஒரு நிலைப்பட்டு வணங்கி அவரைப் போற்றுவோம். இந்த உரைமனம் கடந்த இறையருள் ஆட்சியை அயோத்தியா காண்டத்தில் முதற் செய்யுளில் உணர முடியும், வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் (வைப்பெங்கும்), ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறனும் ஊனென்ப, கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்பக் கோல்துறந்து, கானும் கடலும் கடந்திமையோர் இடுக்கண் தீர்த்த கழல் வேந்தே, விண்ணிலிருந்து கீழே வந்து இவ்வுலகில் வாழும் அனைத்து உயிர்களுக்குள்ளும் உறையும் ஊனாகவும் உயிராகவும், மெய் (இறைச்சி (அ) உடல்) யுணர்வாகவும் அவர்கள் உள்ளத்தின் உள்ளும் வெளியும் ஒன்றிநிற்பவன்; கூனியாகிய மந்தரையும் சிறியதாயாம்

பட்டத்தரசிகைகேயியும் கொடுமை செய்யக் காடும் கடலும் கடந்து தேவர்கள் துன்பம் தீர்த்த வீரக்கழல் அணிந்த இராமன்; இது அப்பாடற் பொருள், இதே போல் அருட்பெருஞ்சோதி ஆண்டவரும் எல்லா உயிர்களுக்கும் உடலாய் உயிராய், உணர்வாய் நீக்கமின்றி ஒன்றி உறைந்துள்ளான், அவன் அரசாட்சியின் மகிமை உயர்ந்தது அதை எவ்வளவு எனக் கூற இயலாது. இதையே வள்ளற்பெருமான் அரைசு செய்தோங்கும் அருட்பெருஞ்சோதி என்கிறார்.

7.ஊக்கம் முதலியன அருளியது

13.ஊக்கமும் உணர்ச்சியும் ஒளிதரும் ஆக்கையும்
14.ஆக்கமும் அருளிய அருட்பெருஞ்சோதி

பொருள் : இம்மனித உடலுக்கு ஊக்கத்தையும் மெய்யுணர்வாம் இறைவனை உணரும் உணர்வையும் தந்து நம்மனித உடம்பை ஒளி உடம்பாகவும் ஆக்கி வளர்ச்சியும் அருளிய அருட்பெருஞ்சோதி ஆண்டவரைப் போற்றித் தொழுவோம் என்கிறார் வள்ளலார். சுத்தசன்மார்க்கிகளாம் சன்மார்க்க அன்பர்கள் ஊக்கமும், இறைப் பேராற்றலாம் மெய்யுணர்வாளர்களாய் ஒளி உடம்பு பெற்று ஆக்கமும் நல்ல செயல்திறனும் அருட்சித்தாம் அழியாச் செல்வமும் பெற்று வாழ்வர். இதையே ஊக்கமும் உணர்ச்சியும், ஒளிதரும் ஆக்கையும், ஆக்கமும் அருளிய அருட்பெருஞ்சோதி என வழுத்தியுள்ளார்.

8.பிறவித் தொல்லை நீங்கியது

15.எல்லையில் பிறப்பெனும் இருங்கடல் கடத்தியென்
16.அல்லலை நீக்கிய அருட்பெருஞ்சோதி

பொருள் : இங்கே வள்ளலார் தம் எல்லை இல்லாமல் பிறக்கும் பல பிறவித் துன்பங்களிலிருந்து நீக்கி எனக்கு மீண்டும் பிறக்காத பேறையும் மரணமிலாப் பெருவாழ்வையும் வழங்கிய அருட்பெருஞ்சோதி ஆண்டவரே உமைப் போற்றித் தொழுகின்றேன் எனப் போற்றுகின்றார்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேரா தார் என்பது வள்ளுவர் வாய் மொழி.

*(தொடரும்...)*

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)
## (இராமன் கானகம் செல்லல்)
(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

இராமன் இலக்குவனோடு தன் அரண்மனைக்குச் சென்று சீதையிடம் விடைபெற எண்ணிச் சென்றான். எவ்விதமான ஆடை அணிகலன்களும் இன்றித் தாயார்களிடம் அழுது துயருற்று மரவுரிகள் அணிந்து வந்த இராமனைக் கண்டு இவ்வண் துயர் என்னை உற்றது? இயம்பு என்று, இயம்பினாள்.

ஒப்பில்லா நாயகன் இராமன் மேயமண் இழந்தான், வனம் நண்ணல் உற்றான் என்று அறிந்து அழுத சீதையை நீ வருந்தலை நீங்குவன் யான் என்று மொழிந்த இராமனுடைய தீய வெஞ்சொல் கேட்டு செவிசுடத் தேம்புவாள் ஆயினள். இராமனுடைய சமாதான வார்த்தைகளைக் கேட்டு ஐயனும் அன்னையும் சொன்ன செயல் செய்யத்தக்கதே. தூயதே. ஆயினும் என்னை இருத்தி என்ற சொல்லை எவ்வாறு பொறுப்பேன் என்று அரற்றினாள். உன்னுடைய மலர்ப் பாதங்கள் கானகத்தினுடைய வெம்மை தாங்காது. கல்லும் முள்ளும் உனக்கு மிக்க துயரைத் தரும்; நான் 14 ஆண்டுகள் தவம் புரிந்து உடனே திரும்பிவிடுவேன் என்று எவ்வளவோ சமாதானம் சொல்லியும் ஈண்டுநின்பிரிவினும் சுடுமோ, பெருங்காடு என்றாள். சீதாப் பிராட்டியுடைய உள் மனக் கருத்தை இராமன் உணர்ந்து என் செய்வது என்று சிந்திக்கும் நேரம் மரவுரி அணிந்து அண்ணலின் பக்கம நின்றனள். அவள் அவன் நீள்கரம் பற்றினள்.

வேறு வழியின்றி,

***சீரை சுற்றித் திருமகன் பின் செல,***
***மூரி விற் கை இளையவன் முன் செல***
***காரை ஒத்தவன் போம்படி கண்ட, அவ்***
***ஊரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ?***

என்னுமாறு இராமன், சீதை, இலக்குவனுடன் கானகம் புறப்பட்டுச் சென்றான். இராமனைப் பிரிய மனமில்லாத நகர மாந்தர்கள் அனைவரும் மனதில் துயருடனும் கண்ணீல் நீருடனும் அவனைப் பின் தொடர்ந்தனர். முதியவர், நோயுற்றவர், குழந்தைகள், விலங்குகள் தவிர அனைவரும் சுமந்திரன் செலுத்திய தேரின் பின்னே

இராமபிரானைத் தொடர்ந்து கானகம் நோக்கிப் புறப்பட்டனர். இராமன் இல்லாத அயோத்தியில் நாங்கள் இருக்கமாட்டோம் என்ற மன உறுதியோடு புறப்பட்டனர்.

இரவு வந்ததும் அயோத்தி எல்லையில் அனைவரும் தங்கினர். நகரமாந்தர்களைச் சமாதானப்படுத்தித் திருப்பி அனுப்புவது இயலாத காரியம் என்று தெளிந்த இராமபிரான் அமைச்சர், சுமந்திரனோடு பேசி முடிவு செய்து ஒரு நாடகம் ஆடினார். இராமபிரானின் ஆணையின் வண்ணம் சுமந்திரர் திரும்பவும் அயோத்தி நோக்கித் தேரைச் செலுத்தினார். மக்கள் அனைவரும் இராமர் அயோத்தி நோக்கித் திரும்பிவிட்டார் என்று மகிழ்ந்து திரும்பி அயோத்தியை அடைந்தனர். சில நாழிகைகள் காத்திருந்து அவரவர் இல்லங்களிலே நகர மாந்தர்கள் உறங்கி அமைதி அடைந்த பின்னர் இராமபிரானின் சொல்லின் வண்ணம் சுமந்திரன் மூவரையும் காட்டிற்கு அழைத்துச் சென்று அவர்களைக் காட்டில் விட்டுத் திரும்பினான். சுமந்திரன் திரும்பி வந்ததும் வசிஷ்டர் மூலமாக இராமன் காட்டிற்குச் சென்றுவிட்டான் என்பதை அறிந்த தசரதன் அதே நொடியில் துயருற்று வசிஷ்டரை அழைத்து இக்கணத்திலிருந்து கைகேயி என் மனைவி அல்லள், பரதன் என் மகன் அல்ல, பரதன் எனக்கு ஈமச்சடங்குகள் செய்யக் கூடாது என்று சொல்லி அவருடைய வாக்குறுதியைப் பெற்றுக் கொண்ட நொடியிலே தன் உயிர் துறந்தான்.

தயரதன் வானுலகை அடைந்த பின்னர் வசிஷ்ட முனிவர் மக்கள் நால்வரும் அருகில் இல்லை என் செய்வது என்று சிந்தித்து, பரத சத்ருக்கனர் வருகிற வரையில் தசரதன் உடலைப் பாதுகாக்கும் வண்ணம் தைலத்தில் அமிழ்த்திப் பாதுகாப்பாக வைத்திருக்க ஏற்பாடு செய்தார்.

வசிஷ்ட முனிவர் மாமன் நாடான கேகய நாட்டிற்குச் சென்றிருந்த பரதனுக்கு, உடனடியாகப் புறப்பட்டு அயோத்தி வந்து சேர்க என்று ஓலை எழுதித் தூதவர்களிடம் கொடுத்து அனுப்பினார். அதன் பின்னர் அழுது புலம்பிக்கொண்டு இருந்த பட்டமகிஷிகளையும் அந்தப்புர மாதர்களையும் சமாதானம் செய்து அவரவர் இருப்பிடத்திற்கு அனுப்பி வைத்தார். அந்தப்புர மாதர்கள் 60000 பேர் இருந்தார்கள் என்று

கம்பர் பதிவு செய்கிறார். இதனை, தையல்கடல் நின்று எடுத்து, அவனைத் தயிலக் கடலின் தலை உய்த்தான் என்று அழகாகக் குறிப்பிடுகிறார் கம்பர்.

கைகேய நாட்டில் மாமன் வீட்டில் தங்கியிருந்த பரதனும் சத்துருக்கனனும் தங்களை உடன் வரச்சொன்ன காரணம் ஏது என்று அறியாமல் குழப்பத்துடன் மாமன் மற்றும் உறவினர்களிடம் இருந்து விடைபெற்றுத் தேர் ஏறிக் கடிது விரைந்து வந்தார்கள்.

காட்டில் தூங்கி விழித்த நகர மாந்தர்கள் அனைவரும் இராமன் இலக்குவன் சீதையைக் காணாமல் அழுது புலம்பிக் கானகம் நோக்கிச் செல்ல முற்பட்டனர். ஆனால் அவர்களைக் கண்டுபிடிப்பது எளிதல்ல என்று கருதி மனச் சலிப்போடு நகர் திரும்பினார்கள். வருகிற பாதையில் தேர்ச் சுவடைக் கண்டு இராமன் அயோத்தி திரும்பிவிட்டார் என்று மகிழ்வோடு திரும்பியவர்கள் தசரதன் இறந்துவிட்டார் என்ற செய்தி கேட்டு மீண்டும் மீளாத்துயரில் ஆழ்ந்தார்கள்.

நகர மாந்தர்களை எல்லாம் வசிஷ்ட முனிவர் பிறப்பிறப்பின் இயற்கையைக் கூறிச் சமாதானம் செய்து அவரவர் இல்லத்திற்கு அனுப்பி வைத்தார்.

காடு நோக்கிச் சென்ற மூவரும் கங்கை தீரத்து இயற்கை அழகையும் செழிப்பையும் கண்டு ரசித்துக் கொண்டே சென்றனர். இந்த இயற்கைக் காட்சிகளைக் கம்பர் மிக அழகாக வர்ணிக்கிறார். சீதையும் இராமன் அருகில் இருந்ததால் அச்சமின்றி, காட்டு மிருகங்கள் அனைத்தையும் கண்டு ரசித்து விளையாடிக் கொண்டு சென்றார்.

கங்கை தீரத்திலே தவம் செய்து கொண்டு இருந்த முனிவர் பெருமக்கள் இராமபிரான் வருவதைக் கண்டு சொல்லால் அளக்க முடியாத மகிழ்வோடு எதிர் கொண்டு அழைத்து இனிய கீதம் பாடி வரவேற்றார்கள். இராம பிரானும் சீதாப் பிராட்டி, இலக்குவனோடு கங்கையில் மூழ்கி, சபதவங்களை முடித்துக் கொண்டு ரிஷிகள் கொண்டு தந்த காய் கனிகளை உண்டு ரிஷிமார்களுடன் அளவளாவி மகிழ்ந்தனர்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்
### திரு ஆலவாய் ஆனது

சுகுணபாண்டியனுக்குப் பின்பு சித்திரவிரதன் முதலாகத் தொடங்கி அதுல கீர்த்தி என்பவன் முடிய இருபத்திரண்டு பாண்டிய ராஜ குமாரன் வழிவழியாகத் தோன்றி உலகைச் செவ்வனே ஆண்டனர். அதுல கீர்த்தி என்ற பாண்டிய மன்னனுக்குப் பின் அவனது மைந்தனாகிய கீர்த்திபூஷண பாண்டியன் அரசு காலத்திலேதான் பிரளய காலம் வந்தது. கருங்கடல்கள் ஏழும் பொங்கி யெழுந்தன. உலகம் அழிந்தது. ஏழு தீவுகளும் அழிந்துவிட்டன. அவற்றிலே வாழ்ந்த பொருள்கள் அனைத்தும் அழிந்தொழிந்தன.

உலகம் முழுவதுமே அழிவுற்ற போதிலும் மீனாக்ஷியம்மையின் திருக்கோவிலும், விமானமும், பொற்றாமரைத் திருக்குளமும், ரிஷப மலையும், யானை மலையும், நாக மலையும், பசுமலையும், பன்றி மலையும் அழியாதிருந்தன.

பிரளய நீர் வற்றிவிட்டது. சிவபெருமான் முன்னைப் போலவே உலகத்தையும் தேவர்களையும் மக்களையும் பறவைகளையும், மிருகங்களையும் சிருஷ்டி செய்தார். சந்திர. சூரிய, அக்னி என்னும் குலத்திலே முன்னைப் போலவே பாண்டிய சோழ சேரத் தமிழக வேந்தரையும் படைத்து அருளினார்.

சந்திரகுலமாகிய பாண்டிய மரபிலே வங்கிய சேகரன் என்ற மன்னன் தோன்றினான். அவன் சோமசுந்தரப் பெருமானது திருக்கோவிலைச் சுற்றிலுமாக அழகான சிறிய ஊர் ஒன்றைக் கண்டு ராஜ்ய பாரம் புரிந்து வந்தான். சேகரன் மனுதர்ம சாஸ்திர நெறி நின்று நல்லாட்சி புரிந்து வந்த படியால் கலிப் பகை யொழிந்தது. நாடு பலவளம் சுரந்தது. மக்கள் இனம் பெருகியது. மனிதர்கள் எண்ணிக்கை அதிகமானதாலே வசிப்பதற்கு இடம் போதவில்லை.

அதனைக் கண்ட வங்கிய சேகர பாண்டியன் திருக் கோவிலையடைந்து சோமசுந்தரப் பெருமானை வணங்கி,

எம்பெருமானே; தேவரீரது அருள் வலிமையினால் எளியேன் ராஜ்ய பாரம் புரிந்து வருகிறேன். அடியேனுக்கு ஒரு குறை ஏற்பட்டுள்ளது. என்னுடைய குடிமக்கள் அனைவரும் இருப்பதற்குத் தகுந்த பெரிய நகரம் ஒன்றினை அமைக்க வேண்டும். இந்த நகரத்திற்கு ஆதியிலே ஏற்பட்ட எல்லையைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆதலால் எளியேன் அதனைத் தெரிந்து கொள்ளும் வண்ணம் அருள்புரிய வேண்டும், என்று வேண்டினான்.

உடனே சோமசுந்தரப் பெருமான் பாண்டியனது அன்புக்கு எளியவராகி அறமும் அருளும் சேர்ந்த இன்னுருவமான சித்தமூர்த்தியாகி எழுந்தருளினார். சித்தர் பெருமான் பாம்பலங்காரப் பெருமாளாக விளங்கினார். அவருடைய அரைநாண், பூநூல், வெற்றிமாலை, பாத கிங்கிணி, கங்கணம் எல்லாம் பாம்புகளாகவேயிருந்தன. அந்தத் திருக்கோலம் பூண்டு மகாமண்டபத்தின் அருகே நின்றனர். தனது திருக்கரத்திலே கங்கணமாகத் துலங்கிய பாம்பைப் பார்த்து, ஏ, நாகமே! பாண்டியனுக்கு இந்த நகர எல்லையைக் காட்டுவாயாக என்று பணித்தருளினார். நாகப் பாம்பு சித்தர் பெருமானது அடிபணிந்து, இறைவரே! இந்த நகரம் அடியேனது பெயரால் விளங்கும்படி அருள்புரிய வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டது. பெருங் கருணைத் தடங்கடலாக விளங்கும் பிரான் அவ்வாறே ஆகுக என்று மொழிந்தருளினார்.

பெருமானது கங்கணப் பாம்பு உடனே இறங்கிச் சென்றது. நீண்ட உருவம் எடுத்துக் கொண்டது. கிழக்குத் திசைக்குச் சென்று தனது வாலை நகருக்கு வலமாக நிலத்திலே படியவைத்து வளைத்துக் கொண்டு வந்தது; முடிவில் தனது வாலைத் தனது வாயிலே கவ்விக் கொண்டு பெரிய வளையமிட்டுப் பாண்டிய மன்னனுக்கு மதுரை மாநகரத்தின் பழைய எல்லையினைக் காட்டிக் கொடுத்தது. பின்னர் திரும்பிச் சென்று சித்தமூர்த்திகளின் திருக்கரத்திலே கங்கணமாகிவிட்டது. சித்த மூர்த்தியும் மறைந்தருளினார்.

அதன் பின்னர் வங்கியசேகர பாண்டியன், பாம்பு வளைந்து சென்று வரம்பு காட்டிய படியே சுவர் எடுத்தான். சக்கரவாளகிரி என்ற நெடும் பெருமதில் கட்டு வித்தான். தெற்கு வாசலுக்குத் திருப்பரங்குன்றம், வடக்கு வாசலுக்கு ரிஷபமலை, மேற்கு வாசலுக்குத் திருவேடகமும், கிழக்கு வாசலுக்குத் திருப்பூவனமும் எல்லையென அமைத்தான் பாண்டியன்.

பாண்டியன் எழுப்பிய புதுப் பெருமதில் ஆலவாய் மதில் என்று அழைக்கப்பட்டது; அந்தப் புதுநகரம் ஆலவாய் என்னும் பெயர் கொண்டு நிலைப்பதாயிற்று.

வங்கிய சேகர பாண்டியன் ஆலவாய்ப் புதூரை முன்போல ஒழுங்கு செய்தான். கொடிகள் இலங்கிய நீண்ட திருமதிலும், திருமண்டபமும், திருக்கோபுரமும், திருவீதியும், பொழில்களும் மற்றும் பலவற்றையும் பாங்குற அமைத்தான். சோமசுந்தரப் பெருமானுக்கு நவமான ரத்தின கவசமும், ரத்தின மகுடமும், பல்வேறு வகையான ரத்தினாபரணங்களும் செய்து கொடுத்தான்.

அந்த ஆலவாய்த் திருநகரத்திலே குடியேறிய மக்கள் எல்லாரும் மிகவும் சுகமாக வாழ்க்கை நடத்தினர். நகரத்திலே வளம் கொழித்தது.

வங்கிசேகர பாண்டியன் மிகுந்த புகழ் பெற்று நல்லரசு செய்து கொண்டிருந்தான்.

*(தொடரும்...)*

---

**26.12.2020** அன்று **இலக்கியப் பூங்கா நிகழ்வில்**

சிலப்பதிகாரம் – வழக்குரை காதை பற்றி

முனைவர் பேராசிரியர் **இரா.கீதா** சொற்பொழிவாற்றினார்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்